கியலை வியந்து கூறியதாகப் பொருள் காண்பாருமுளர். "தாழ்ந்தோருயர்வரென்று மிகவுயர்ந்தோர் தாழ்வரென்று மறஞ், சூழ்ந்தோருரைக்குமுரை கண்டாம்" என்ற பிரபுலிங்கலீலையும் காண்க. (அ)

கஎகூ. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

பரி:—பெருமை - பெருமைக் குணமாவது,—பெருமிதம் இன்மை-(காரணமுண்டாயவழியும்அஃதுஇயல்பாதல்நோக்கித்) தருக்கின்றியிருத்தல்; சிறுமை-சிறுமைக்குணமாவது,—பெருமிதம் ஊர்ந்து விடல் - (அஃது இல்வழியும் அதனை யேற்றுக் கொண்டு) தருக்கின்முடிவின் கண்ணே நின்றுவிடுதல்; (எ - று.)

அளவறத் தருக்குத லென்பதாயிற்று. 'விடும்' என்று பாடமோதுவாரும் உளர்; முற்றுத்தொடரும் எழுவாய்த்தொடரும் தம்முள் இயையாமையின், அது பாடமன்மை அறிக.

(கு - ரை.) பாராட்டுக் கொள்ளுதற்கு ஏற்பக் குடிமை முதலியன இருப்பினும் தருக்கின்றியிருப்பதே பெருமைக்கு இலக்கணம்: ஏனைச் சிறுமைக்கோ தருக்குக்கொள்ளக் காரணம் இன்றியிருப்பினும் அளவறத்தருக்குத லென்பதாம். காரணம் - பெருமை பாராட்டுதற்குக் காரணமான உயர்குடிப்பிறப்பும் கல்விப்பொருளும், செல்வப்பொருளும். அஃது - அப்பிறப்பு முதலியவற்றினமைதி. ஏற்றுக்கொண்டு - உளதாகக் கற்பித்துக் கொண்டு. முடிவு - முடிந்தஎல்லை. பெருமித மூர்ந்துவிடலென்பதன்கருத்து, அளவறத்தருக்குதலென்பது. முற்றுத்தொடர் - முதல்வாக்கியம்: அதில் பெருமையென்னும் பெயர்ப்பயனிலை பெருமிதமின்மையென்னும் எழுவாயோடு தொடர்ந்தது. எழுவாய்த்தொடர் - இரண்டாம் வாக்கியமாகிய 'சிறுமைபெருமித மூர்ந்துவிடும்' என்பது: அதில் சிறுமையென்னும் எழுவாய் ஊர்ந்துவிடும் என்னும் முற்றைக்கொண்டு முடிதல்காண்க. இந்த இரண்டு வாக்கியங்களும் ஒருவழிப்படாமல் மாறுபடுதல் ப்ரக்ரம பங்கம் [எடுப்பழிவு] என்னுங் குற்றமாகு மாதலால், 'தம்முளியையாமையின் அஃது பாடமன்மையறிக' என்றார். பெருமிதமூர்ந்துவிடலென்ற பாடத்தில் இரண்டு வாக்கியமும் முற்றுத்தொடராம். பெருமிதம் - எல்லாரோடும் ஒப்பநில்லாது பேரெல்லையாக நிற்றல். ஊர்ந்து - மேற்கொண்டு. (கூ)

கூஅ0. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

பரி:—பெருமை - பெருமையுடையார், அற்றம் மறைக்கும் - (பிறர்மானத்தையே கூறி) அவமானத்தை மறையா நிற்பர்; சிறுமை - மற்றைச் சிறுமையுடையார், குற்றம் ஏ கூறிவிடும் - (பிறர்குணத்தை மறைத்துக்)குற்றத்தையே கூறிவிடுவர்;(எ-று.)

மறைத்தலும், கூறலும், ஏனையிடத்தும் இயைந்தன. அற்றம் - ஆகுபெயர். தான் என்பது - அசைநிலை.

இவை மூன்று பாட்டானும், இருவர் செயலும் ஒருங்கு கூறப்பட்டன.

(கு - ரை.) பெரியோரின் தன்மை பிறருடைய மானத்தை [நற்குணத்தை] எடுத்துச்சொல்லிக் குற்றத்தை மறைப்பதாக விருக்க, ஏனைச்சிறியோரின் தன்மையோ பிறர் நற்குணத்தை மறைத்துக் குற்றத்தை வெளிப்படுத்தலேயா மென்பதாம். மானம் - பெருமைக்குணம். ஏனையிடத்தும் - மற்றையிடத்திலும் : 'மறைத்தல்' என்பது - சிறுமை யென்றவிடத்தும், 'கூறல்' என்பது பெருமை யென்றவிடத்துமாக இயைதல் காண்க. அற்றம் - சோர்வு ; சோர்வினுலுளதாகும் அவமானத்தை 'அற்றம்' என்றது கருவியாகுபெயர். ஏ - பிரிநிலை. 'விடு' என்பது துணிவுப்பொருளை யுணர்த்தும்; முந்தினகுறளிலும் இது. இருவர் - பெருமையுடையாரும், சிறுமையுடையாரும். பண்பியின் தொழில் பண்பின்மேல் ஏற்றிக்கூறப்பட்ட உபசாரவழக்கை, 'பெருமை அற்றமறைக்கும்: சிறுமைகுற்றமே கூறிவிடும்' என இந்தக் குறளிலும் காண்க. அசையெனினும், அசைநிலையெனினும் ஒக்கும். (௯௦)

## ௯௯ - ஆம் அதிகாரம்—சான்றாண்மை.

பரி :—அஃதாவது-பலகுணங்களானும் நிறைந்து அவற்றை ஆடல்தன்மை. 'பலகுணங்களானும்' என்பது சாலுதற்றொழிலாற் பெறப்படுதலின், 'அவற்றை' என்பது வருவிக்கப்பட்டது. பெருமையுள் அடங்காத குணங்கள் பலவற்றையும் தொகுத்துக் கொண்டு நிற்றலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) சான்று ஆண்மை யென்பதற்கு-நிறைந்து ஆளுந் தன்மை என்று பொருளாதலாலும், நிறைதலென்னும் பொருளுள்ள 'சாலுதல்' என்னுந்தொழிலாற் பலகுணங்களானுமென்று பெறப்படுதலாலும், ஆளுதலென்ற தொழிற்கு இயைய அப் பலகுணங்களை யென்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. தொகுத்து - ஒருசேர அடக்கி. இஃது - இவ்வதிகாரம். அதன் பின் - பெருமையென்னும் அதிகாரத்திற்குப்பின்.

௯௮௧. **கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து**
**சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.**

பரி:—கடன் அறிந்து - (நமக்குந்) தகுவது (இது என்று) அறிந்து, சான்றாண்மை மேல்கொள்பவர்க்கு-சான்றாண்மையை மேற்கொண்டு ஒழுகுவார்க்கு, நல்லவை எல்லாம் கடன்-நல்லனவாய குணங்களெல்லாம் இயல்பாயிருக்கும், என்ப - என்று சொல்லுவர், (நூலோர்) ; (எ - று.)

சில குணங்கள் இல்லாயவழியும், உள்ளன செய்துகொண்டனவாயவழியும் சான்றாண்மையென்னுஞ் சொற்பொருள் கூடாமையின், நூலோர் இவ்வேதுப்பெயர்பற்றி அவரிலக்கணம் இவ்வாறு கூறுவ ரென்பதாம்.

(கு - ரை.) சான்றோர்க்கு நல்லனவாகிய குணங்களெல்லாம் இயல்பாயிருக்குமென்பதாம். கடன் - கடமை. நூலோர் - சாஸ்திர முணர்ந்தவர். உள்ளன செய்துகொண்டன ஆயவழியும் - உள்ள குணங்கள் இயல்பினுலமையாமற் செயற்கையாக ஏற்றுக்கொண் டனவானபொழுதும். சொற்பொருள் - சொல்லின்பொருள். கூடா மையின் - பொருந்தாதலால். இவ்வேதுப்பெயர்-சான்ருண்மை யென்னுங் காரணப்பெயர். (க)

கூஅஉ. **குணநலஞ் சான்ருேர் நலனே பிறநலம்**
**எந்நலத் துள்ளதூஉ மன்று.**

பரி:—சான்ருேர் நலன் - சான்ருேர் நலமாவது, குணம் நலம் ஏ - குணங்களாலுய நலமே; பிற நலம்-(அஃது) ஒழிந்த உறுப்புக்களாலுய நலம், எ நலத்துஉம் உள்ளது அன்று-ஒரு நலத்தினும் உள்ளதன்று; (எ - று.)

அகநலத்தை முன்னே பிரித்தமையின் ஏனைப் புறநலத்தை ‘பிறநலம்’ என்றும், அது குடிப்பிறப்புங் கல்வியும் முதலாக நூலோர் எடுத்த நலங்களுட் புகுதாமையின் ‘எந்நலத்துள்ள தூஉ மன்று’ என்றுங் கூறினர்.

இவையிரண்டுபாட்டானும், சால்பிற்குஏற்ற குணங்கள் பொதுவகையாற் கூறப்பட்டன.

(கு - ரை.) சான்ருேர்க்குக் குணங்களாலாகிய நலனே நலமாவ தன்றி, உறுப்புக்களினுலாகிய நலம் நலமாகமாட்டா என்பதாம். உறுப்புக்கள் - அவயவங்கள். நலம் - அழகு. அகநலம் - மனத் தின் நன்மை. குணநலமேயென்றதனுல், அந்நலம் பிரிக்கப்பட்ட தென்க. ஏ - பிரிநிலை. புறநலம் - உடம்பினழகு. அது - பிறநலம். புகுதாமையின் - சேராததலால். சால்பு - சான்ருண்மை. அள பெடை - இன்னேசைதர வந்தது. (உ)

கூஅங. **அன்புநா ணெப்புரவு கண்ணேட்டம் வாய்மையொடு**
**ஐந்துசால் பூன்றிய தூண்.**

பரி:—அன்பு-(சுற்றத்தார்மேலேயன்றிப் பிறர்மேலும் உள தாய) அன்பும், நாண்-(பழிபாவங்களின்) நாணலும், ஒப்புரவு - (யாவர்மாட்டும்) ஒப்புரவு செய்தலும், கண்ணேட்டம் - (பழைய யார்மேல்) கண்ணேடலும், வாய்மையொடு - (எவ்விடத்தும்) மெய்ம்மை கூறலும் என, சால்பு ஊன்றிய தூண் ஐந்து - சால் பென்னும் பாரத்தைத் தாங்கிய தூண்கள் ஐந்து; (எ - று.)

எண்ணெடு, முன்னவற்ருேடுங் கூடிற்று. இக்குணங்கள் இல்வழிச் சால்பு நிலைபெருமையின், இவற்றை ‘தூண்’ என்ருர். ஏகதேசவுருவகம்.

(கு-ரை.) அன்புமுதலிய ஐந்துகுணங்களினுலேயேசால்புநிலைத் திருக்குமென்பதாம். சுற்றத்தார் - உறவினர். பழையார்மேற் கண்ணேடல் - முன் பரிசயமுடையவரிடத்தில் தாட்சிணியப்படுதல். முன்பு கண்ணேட்டமென்னும் அதிகாரத்தில் ‘அஃதாவது - தன்

ஞெடு பயின்ருரைக்கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை: இஃது அவர்மேற் கண்சென்றவழி நிகழ்வதாகலின் அப்பெயர்த் தாயிற்று' என உரைத்தது உணரத்தக்கது. எண் ஒடு-எண்ணுப் பொருள் தருவதாகிய 'ஒடு' என்னுஞ்சொல். அது அன்பொடு நாணொடு ஒப்புரவொடு கண்ணோட்டத்தொடு என நின்றவிடத்திற் பிரிந்து பிறவிடத்துஞ்சென்று பொருந்தியமை காண்க. இக் குணங்கள் - அன்பு முதலிய குணங்கள். அன்பு முதலிய குணங் களைத் தூணாக உருவகஞ் செய்தவர், அதற்கேற்பச் சால்பினைப் பாரமாக உருவகஞ் செய்யாமையால், இஃது - ஏகதேசவுருவகம். (௩)

கூஅச. **கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை**
**சொல்லா நலத்தது சால்பு.**

பரி:—(பிறஅறங்களும் வேண்டுமாயினும்), நோன்மை - தவம், கொல்லா நலத்தது-(ஓருயிரையுங்) கொல்லாத அறத்தின் கண்ணதேயாம் ; (அதுபோல), (பிறகுணங்களும் வேண்டுமாயி னும்), சால்பு—, பிறர் தீமை சொல்லா - பிறர் குற்றத்தைச் சொல்லாத, நலத்தது - குணத்தின் கண்ணதேயாம் ; (எ - று.)

நலம் என்னும் ஆகுபெயர்ப்பொருள் இரண்டனையும் தலைமைதோன்ற இவ்விரண்டற்கும் அதிகாரமாக்கிக் கூறினர். தவத்திற்குக் கொல்லாவறம் சிறந்தாற்போலச் சால்பிற்குப் பிறர் குற்றஞ்சொல்லாக்குணம் சிறந்தது என்பதாம்.

(கு-ரை.) தவத்திற்குக் கொல்லாநலம் சிறந்ததாதல் போலச் சால்பிற்குப் பிறர்குற்றஞ்சொல்லாத குணம்சிறந்த தொன்ருமென் பதாம். பிறஅறங்களை உள - ஆவது அதிகாரத்தின் அவதாரிகை யிற் காண்க. அறத்தின்கண்ணதே - அறத்தினிடத்திலேயே யுள்ளது. "நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக், கொல் லாமை சூழ்வான்றலை" என்ருர், கீழ்க்கொல்லாமையென்ற அதி காரத்தும். பிறகுணங்கள் - அன்பு நாண் ஒப்புரவு முதலானவை. 'நலத்தது' என்னுஞ் சொற்களிலுள்ள 'நலம்' என்பன - பண்பாகு பெயரால், முறையே, நலத்தையுண்டாக்கும் அறம் குணம் என்ற பொருளைக் காட்டும். ஆகுபெயர்ப்பொருளிரண்டு - அறமும் குண மும். இவ்விரண்டற்கும் - தவத்துக்கும் சால்புக்கும். அதிகாரம் - முக்கியஸ்தானம். தவத்தில் கொல்லா வறத்திற்கும், சால்பில் பிறரதுதீமை சொல்லாக் குணத்திற்கும் உள்ள தலைமை தோன்ற, நோன்மை கொல்லா நலத்தது', 'சால்பு பிறர் தீமைசொல்லா நலத்தது' என நோன்மை சால்புகட்குக் கொல்லாநலத்தையும் பிறர் தீமைசொல்லா நலத்தையும் முறையே இடமாக்கிக் கூறினு ரென்றவாறு. (௪)

கூஅ[illegible]. **ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்ருேர்**
**மாற்ருரை மாற்றும் படை.**

பரி:—ஆற்றுவார் - (ஒருகருமத்தைச்) செய்துமுடிப்பாரது, ஆற்றல்-ஆற்றலாவது,—பணிதல் - அதற்குத் துணையாவாரைத்

தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல்: சான்றோர்-(இனி)சால்புடையார், மாற்றாரை - (தம்) பகைவரை, மாற்றும்-பகைமையொழிக்கும், படை - கருவியும், அஃது - அதுவே. (எ - று)

ஆற்றல் - அதுவல்லராந் தன்மை. இறந்ததுதழீஇய எச்சவும்மை, விகாரத்தால் தொக்கது. சால்பிற்குஏற்ற பணிதற் குணத்தது சிறப்புக் கூறுவார், ஏனையதும் உடன்கூறினார்.

(கு - ரை.) சான்றோர்க்குப் பணிவு என்பது ஆற்றலாவதோடு மாற்றாரை மாற்றும் படையுமா மென்பதாம். கருமம் - தொழில். அதற்கு - கருமத்தைச்செய்து முடித்தற்கு. அது - பணிவு. அது வல்லர் - தொழில்செய்து முடிக்கவல்லவர். படையென்பதன்பின், இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. ஏனை யது-மற்றொன்று: மாற்றாரை மாற்றும்படை அப்பணிவு என்பது. சான்றாண்மையைச்சார்ந்த பணிவைக் கூறுமிடத்துப் பகைவரை மாற்றும் படையென்பது ஏனையதாத லறிக. மாற்றார் - மாறு பாடுடையோர். (௫)

௯௮௬. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

பரி :—சால்பிற்கு-சால்பாகிய பொன்னின் அளவு அறிதற்கு, கட்டளை - உரைகல்லாகிய செயல், யாது எனின்—, (அது), தோல்வி - (தம்மின் உயர்ந்தார்மாட்டுக் கொள்ளுந்) தோல்வி யை, துலை அல்லார்கண்உம் - இழிந்தார்மாட்டும், கொளல் - கோடல் ; (எ - று.)

துலை - ஒப்பு. எச்சவும்மையான், இருதிறத்தார்கண்ணும் வேண்டுதல் பெற்றாம்.கொள்ளுதல்-வெல்லும் ஆற்ற லுடையரா யிருந்தே ஏற்றுக் கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல் கருதித் தம்மோடு ஒப்பித்துக்கொள்ளாது தோல்வியான் அவரினும் உயர்வராயின், அதனால் சால்பளவு அறியப்படுமென்பதாம்.

(கு - ரை.) ஆற்றலுடையவராயிருந்தே உயர்ந்தாரிடத்துப் போலவே தம்மினும் இழிந்தவரிடத்தும் மிகப் பணிவுகாட்டுதலி னால் சான்றோரின் சால்பளவு அறியப்படுமென்பதாம். அளவு - மாற்று. தோல்வி-பணிவு, கீழ்ப்படிதல். 'துலையல்லார் கண்ணும்' என்ற இடத்துள்ள இழிவுசிறப்புப் பொருளோடு இறந்தது தழு விய எச்சப்பொருளையுமுடைய உம்மையினால், உயர்ந்தார் இழிந் தார் என்ற இருவரிடத்தும் தோல்வி வேண்டுதல் பெறப்படு மென்க. ஒப்பித்துக்கொள்ளுதல் - சமமாக்கிக்கொள்ளுதல். தோல் வியான் உயர்வராயின் என இயையும்: தோல்வியான் உயர்தல் - மிக்கபணிவுகாட்டுதல். அவரினும் - துலையல்லாரைவிட. சால்பு அளவு-சால்பினளவு, துலையல்லார் கண்ணும் தோல்விகொள்ளு தலைக் கட்டளை யென்றதற்கு ஏற்ப, சால்பைப் பொன்னென்னாமை யால், இஃது ஏகதேசவுருவகம். (௬)

௯௮௭. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

பரி :—இன்னா செய்தார்க்குஉம் - (தமக்கு) இன்னாதவற்றைச் செய்தார்க்கும், இனிய செய்யாக்கால் - (சால்புடையார்) இனியவற்றைச் செய்யாராயின், சால்பு என்ன பயத்தது - அச் சால்பு வேறு என்ன பயனை யுடைத்து? (எ - று.)

சிறப்பு உம்மை, அவர் இன்னாசெய்தற்கு இடனாதல் விளக்கி நின்றது. ஓகாரம் - அசை. வினா-எதிர்மறைப்பொருட்டு. தாமும் இன்னாசெய்வராயின், சால்பால் ஒருபயனும் இல்லை யென்பதாம்.

இவை யைந்துபாட்டானும், சிறப்புவகையாற் கூறப்பட்டன.

(கு - ரை) சால்புடையவர் இன்னாசெய்தார்க்குத் தாமும் இன்னாதவற்றைச் செய்வராயின், இவரிடத்துள்ள சால்பால் ஒரு பயனு மில்லை யென்பதாம். இன்னாதவற்றை - துன்பந்தருவனவற்றை. 'இன்னா செய்தார்க்கும்' என்ற இடத்துள்ள இழிவு சிறப்பும்மை, தம்மால் இன்னாசெய்தற்கு உரியவர் அவர் என்பதை விளக்கி நின்றது. 'என்ன' என்ற வினா - எதிர்மறைப் பொருளது; சால்பாவது - குணங்களால் நிறைந்திருக்குந்தன்மை. "கறுத் தின்னா செய்தவக்கண்ணு மறுத்தின்னா, செய்யாமை மாசற்றார் கோள்", "இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண, நன்னயஞ் செய்துவிடல்" என்பன, இங்குக் காணத்தக்கன. சால்பிற்கு ஏற்ற குணங்கள் சிறப்புவகையாற் கூறப்பட்டவற்றை - 3-ஆம் குறளில் அன்பு முதலிய ஐந்து குணங்கள் சால்பைத் தாங்குவன எனவும், 4-ஆங் குறளில் பிறர் குற்றத்தைச் சொல்லா நலத்தது சால்பு எனவும், 5-ஆம் குறளில் பணிவு சான்றோர்க்கு ஆற்றலாவதோடு மாற்றாரை மாற்றும் படையெனவும், 6-ஆம் குறளில் சால்பினளவு உயர்ந்தாரிடத்துப் போலவே தாழ்ந்தாரிடத்தும் பணிவு எனவும், 7-ஆம் குறளில் இன்னாசெய்தார்க்கும் இனியவை செய்தலே சால்பின் பயனெனவும் கூறியிருத்தலாலறிக. (எ)

கூஅஅ. **இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்**
**திண்மையுண் டாகப் பெறின்.**

பரி :—சால்பு என்னும் திண்மை - சால்பு என்று சொல்லப்படும் வலி, உண்டாகப்பெறின்—, ஒருவற்கு - ஒருவனுக்கு, இன்மை - நல்குரவு, இளிவு அன்று - இளிவாகாது ; (எ - று.)

தளராமை நாட்டுதலின், வலியாயிற்று. இன்மையான் வருவதனை இன்மைதானாக உபசரித்துக்கூறினார். சால்புடையார் நல்கூர்ந்தவழியும் மேம்படுதலுடைய ரென்பதாம்.

(கு - ரை.) சால்புடையவர் வறுமையை யடைந்தாலும், அதனால் இழிவடையாது மேம்படுத லுடையராவ ரென்பதாம். சால்பென்பது எந்நிலையிலும் ஒருவனைத் தளரவொட்டாமல் நிலைநிறுத்துதலால், வலியாமென்க. வலி - வலிமை. இளிவு - தாழ்வு விளைப்பது; இளிவு = இழிவு. இன்மை - பொருளின்மை. இன்மை

தாகை - இன்மையாகவே. பொருளில்லர்மையால் வருகிற வறுமையை இன்மையாகவே உபசரித்துக் கூறியது, காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசாரவழக்கு- (அ)

கஅகூ. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி யெனப்படு வார்.

பரி:—சான்றாண்மைக்கு - சால்புடைமையாகிய கடற்கு, ஆழி எனப்படுவார் - கரையென்று சொல்லப்படுவார்,—ஊழி பெயரின்உம் - (ஏனைக் கடலும் கரையுள் நில்லாமல்) காலந்திரிந்தாலும், தாம் பெயரார் - தாம் திரியார் ; (எ - று.)

சான்றாண்மையது பெருமை தோன்ற அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலின் அஃதுடையாரைக் கரையாக்கியுங் கூறினர்; "பெருங்கடற்கு ஆழி யனையன் மாதோ" என்றார் பிறரும். ஏகதேசவுருவகம்.

(கு - ரை.) சால்புடையார் எப்போதும் தம் நிலையினின்றும் மாறுபடாரென்க. "உறையார்விசும்பி னுவர்மதிபோல, நிறையா நிலவுதலன்றிக் - குறையாத, வங்கம்போழ் முந்நீர்வளம் பெறினும் வேறாமோ, சங்கம்போல் வான்மையார் சால்பு" என்பது, இங்கு ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது. சால்புடைமையாகிய கடற்குக் கரையென்று சொல்லப்படுவார் - சான்றாண்மைக்கு வரம்பாய் நிற்பவர் ; சான்றாண்மை தவறாதவர். ஏனைக் கடல் - இயற்கையான கடல். காலந்திரிந்தாலும் - பிரளயம் நேர்ந்தாலும் : திரிதல்-மாறுபடுதல். தாம் திரியார் - தாம் நிலைமாறார். சான்றாண்மையின் பெருமைதோன்ற அதனைக் கடலாக்கியும், அச்சான்றாண்மையைத் தாங்கி நிற்றலாற் சான்றாண்மையுடையாரைக் கரையாக்கியுங் கூறினார். 'ஆழி' என்பது - கரையென்னும் பொருளில் வருதற்கு "பெருங்கடற் காழி யனையன் மாதோ" என்ற மேற்கோள் புறநானூறு ௩௩௦ - ஆம் பாடலிலுள்ள அடி; இதன் பொருள் :— பெரிய கடலுக்குக் கரைபோல்வா னென்பது. 'பிறர்' என்றது, அப்பாடல்செய்தவரான மதுரைக் கணக்காயனார்மேல் நிற்கும். சான்றாண்மை யுடையாரைக் கரையாக உருவகஞ் செய்ததற்கேற்பச் சான்றாண்மையைக் கடலாக உருவகஞ் செய்யாதது - ஏகதேசவுருவகவணி. (கூ)

கககo. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை.

பரி :—சான்றவர் - பலகுணங்களானும் நிறைந்தவர், சான்றாண்மை குன்றின் - (தம்) தன்மை குன்றுவாராயின், இரு நிலம் தான் பொறை தாங்காது-மற்றை இருநிலந்தானும் தன் பொறையைத் தாங்காததாய் முடியும் ; (எ - று.)

'தானும்' என்னும் எச்சவும்மை, விகாரத்தால் தொக்கது. அவர்க்கு அது குன்றாமையும், அதற்கு அது தாங்கலும் இயல்

பாகலான், அவை எஞ்ஞான்றும் *உளவாகாநின்றன என்பது தோன்ற நின்றமையின், மன் - ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம்-அசை. இதற்கு - இருநிலம் பொறைதாங்குவது சான்றவர் துணையாக வருதலான் அதுவும் அது தாங்கலாற்ருது என்று உரைப்பாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும், அவற்ருல் நிறைந்தவரது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) முதலுரையின் கருத்து - பூமியானது பாரத்தைச் சுமப்பதுபோலச் சான்ருேர் சான்ருண்மையை வகிப்பரென்பது. இனி, இக்குறட்குக் கூறிய வேருேருரை:—இருநிலம் பொறை தாங்குவது சான்றவர் துணையாக வருதலாலாகும்: ஆதலால், சான்றவர் சான்ருண்மை குன்றின் அவ்விருநிலந்தானும் பொறை தாங்கமாட்டாது என்பது. இருநிலம் பெரியபூமி: பண்புத்தொகை. பொறையை - பாரத்தை. எச்சவும்மை - சான்றவர் சான்ருண்மை குன்றியதன்றி என்ற பொருளைத் தருதலால், இங்கே இறந்தது தழுவிய எச்சம். 'இருநிலந்தான்' என்ற இடத்து இருக்கவேண்டிய எச்சவும்மை, செய்யுள் விகாரத்தாற்ருெக்கதென்ருர். சான்றவர்க்குச் சான்ருண்மை குன்ருமையும் நிலத்திற்குப் பொறையைத் தாங்குதலும் இயற்கை யாகையால், அவைகள் எஞ்ஞான்றும் உளவாகின்றன என்பது தோன்ற நின்றமையால், மன் - ஒழியிசைக்கண் வந்ததாம். ஒழியிசையாவது - சொல்லப்பட்ட பொருளை யொழியச் சொல்லாது ஒழிந்துநின்ற பொருளுந்தோன்ற நிற்பது. அவற்ருல் - சால்பிற்குஏற்ற குணங்களால். (கo)

## கூo - ஆம் அதிகாரம்—பண்புடைமை.

பரி:—அஃதாவது-பெருமை சான்ருண்மைகளில் தாம் வழுவாது†நின்றேஎல்லா ரியல்புகளும்அறிந்துஒத்து§ஒழுகுதலுடையனுதல்; "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்ருர் பிறரும். அதிகாரமுறைமையும் இதனுனே விளங்கும்.

(கு - ரை.) "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்ற மேற்கோள் கலித்தொகை நெய்தற்கலி கசு - இல் உள்ளது: மக்கட் பண்பு என்று சொல்லப்படுவது உலகவழக்கம். அறிந்து ஒழுகுதலென்பது, இதன்பொருள். பெருமை சான்ருண்மைகளை யுடையார்க்குப் பண்புடைமை வேண்டுமென்பது பற்றி, அவற்றின்பின் பண்புடைமை வைக்கப்பட்டதென்க.

கூகக. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

பரி:—யார்மாட்டுஉம் - யாவர்மாட்டும், எண் பதத்தால் - எளியசெவ்வியராதலால், பண்புஉடைமை என்னும் வழக்கு எய்

பி - ம்: * உளவாகா என்பது. † நின்று. § ஒழுகுதல்

தல்-(அரிதாய) பண்புடைமை யென்னும் நன்னெறியினை எய்து தல், எளிது—, என்ப - என்று சொல்லுவர், (நூலோர்): (எ-று.)

குணங்களால் நிறைந்து செவ்வியெளியரு மாயக்கால் பண்புடைமைதானே உளதா மாகலின், 'எண் பதத்தா லெய்த லெளிது' என்றும், அஃது உலகத்தையெல்லாம் வசிகரித்தற் பயத்த தாதலின் அதனைத் தொல்லோர் சென்ற நன்னெறி யாக்கியும், அதனை எளிதின் எய்துதற்கு இது நூலோர் ஓதிய உபாய மென்பார், அவர்மேல் வைத்துங் கூறினர்.

(கு - ரை.) குணங்களால் நிறைந்தவர் யாவர்க்கும் எளிதாகக் கண்டு பேசுமாறு காட்சிச்சமயம் கொடுத்தலால் பண்புடைமையை எளிதிற் பெறலாமென்பதாம். யாவர்மாட்டும் - எல்லோரிடத்தும். எளிய செவ்வியராதலால் - தம்மிடத்து எளிதில் வந்து தம்மைக் கண்டுபேசும்படி சமயமளிக்குந் தன்மையையுடையராகுதலால். எண் - எளிமை: பதம் - சமயம்: எண்பதம் - பண்புத்தொகை. வழக்கு - வழங்குதற்கு உரியது: வழங்குதல்-செல்லுதல்: எனவே, சன்மார்க்கமாயிற்று. அஃது - பண்புடைமை. வசிகரித்தற்பயத்தது - வசப்படுத்தலாகிய பயனையுடையது. இது-செவ்வியெளிமை.

௯௯௨ அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

பரி:—அன்பு உடைமை-(பிறர்மேல்) அன்புடையனுதலும், ஆன்றகுடி பிறத்தல் - உலகத்தோடு அமைந்த குடியின்கண் பிறத்தலும் ஆகிய, இ இரண்டுஉம் - இவ்விரண்டும்,—பண்பு உடைமை என்னும் வழக்கு - (ஒருவனுக்குப்) பண்புடைமை யென்று (உலகத்தார்) சொல்லும் நன்னெறி: (எ - று.)

அமைதல் - ஒத்துவருதல். 'குடிப்பிறத்தல்' என்றது, பிறந்தார் செயலை. தனித்தவழி ஆகாது இரண்டுங் கூடியவழியே ஆவது என்பது தோன்ற, முற்றும்மை கொடுத்தார். காரணங்கள் காரியமாக உபசரிக்கப்பட்டன.

இவை யிரண்டு பாட்டானும், பண்புடையராதற் காரணங் கூறப்பட்டது.

(கு - ரை.) அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டாலும் பண்புடைமை யுண்டாகுமென்பதாம். அன்புடைமை குடிப்பிறத்தல் என்ற இரண்டும் கூடியிருக்கும்போதே பண்புடைமை உண்டாவ தென்பார், 'இவ்விரண்டும் என முற்றும்மை கொடுத்துக் கூறினர்: "அன்புடைமையான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம், பண்புடைமை தூதுரைப்பான் பண்பு" என்றது இங்கு ஒருசார் நோக்கத்தக்கது. அன்புடைமை ஆன்ற குடிப்பிறப்பு என்ற இவ்விரண்டும் பண்புடைமை யென்னும வழக்கிற்குக்காரணம் என்று கூறவேண்டிய விடத்து, அன்புடைமை ஆன்ற குடிப்பிறப்பு என்ற இவற்றையே பண்புடைமையென்னும் வழக்கு என்றது - காரணங்களைக் காரியமாக ஒற்றுமைப்படுத்துக் கூறிய உபசாரவழக்காம்.

௧௧௩. உறுப்பொத்தன் மக்களொப் பன்ருல் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

பரி :—உறுப்பு ஒத்தல்-(செறியத்தகாத) உடம்பால் ஒத்தல், மக்கள் ஒப்பு அன்று - (ஒருவனுக்கு) நன்மக்களோடு (ஒப்பாகாமையின் அது) பொருந்துவதன்று; (இனி), ஒப்பதுஆம் ஒப்பு-பொருந்துவதாய ஒப்பாவது, வெறுத்தக்க பண்பு ஒத்தல் - செறியத்தக்க பண்பால் ஒத்தல் ; (எ - று.)

வடநூலார் 'அங்கம்' என்றமையின், 'உறுப்பு' என்ருர். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படும் ஒப்பாவது, உயிரின் வேருய் நிலையுதலில்லா உடம்பு ஒத்தல் அன்று: வேறன்றி நிலையுதலுடைய பண்பு ஒத்தல்: ஆகலான், அப்பெற்றித்தாய அவர்பண்பினை யுடையனுக என்பதாம்.

(கு - ரை.) ஒருவனுக்கு நன்மக்களோடு பெறும் ஒப்பாவது உயிரின் வேருய் நிலைபெருத உடம்பு ஒத்தலாகாது உயிரோடு ஒற்றுமைப்பட்டு நிலைபெறுதலுடைய பண்பினுல் ஒத்தலே யாதலால், அப்படிப்பட்ட அந்த நன்மக்களின் பண்பை யுடையவனுக என்பதாம். செறியத்தகாத-உயிரோடு ஒற்றுமைப்படாத. அது - உடம்பாலொத்தல். செறியத்தக்க - உயிரோடு ஒற்றுமைப்படுகிற. அங்கம் என்ற வடசொல் உறுப்பையும் உறுப்புக்களையுடைய உடலையும் உணர்த்துதல்போல உறுப்பு என்ற தமிழ்ச்சொல்லும் இரண்டையும் உணர்த்தும். அது, இங்கு உடம்பையுணர்த்திற்று: "அங்கங் குலைவதறிவு" என்று உடலை அங்கமென்று பின்னுள்ளார் கூறியதுங் காண்க. நிலையுதல் - நிலைத்தல். வேறு அன்றி - உயிரோடு ஒற்றுமைப்பட்டு என்றபடி. அப்பெற்றித்தாய - அத்தன்மையதான. அவர் பண்பு - நன்மக்களது பண்பு. மக்கள் - மனிதர். குணமே ஆன்மாவோடு நெருங்கியுள்ள தாதலால், 'வெறுத்தக்க பண்பு' என்ருர்: வெறுத்தல் - நெருங்குதலென்னும் பொருளதாதலை "விறப்பு முறப்பும் வெறுப்பும் செறிவே" என்ற தொல்காப்பியத்தாலுமறிக. (௩)

௧௧௪. நயனெடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

பரி :—நயனெடு - நீதியையும், நன்றி-அறத்தையும், புரிந்து-விரும்புதலால், பயன் உடையார் - (பிறர்க்கும் தமக்கும்) பயன்படுதலுடையாரது, பண்பு - பண்பினை, உலகு பாராட்டும் - உலகத்தார் கொண்டாடாநிற்பர் ; (எ - று.)

'புரிந்த' என்னும் பெயரெச்சம்-ஈண்டு, காரணப்பொருட்டு. நயனெடு நன்றிபுரிதலும், பயனுடைமையும் பண்புகாரணமாக வந்தமையின், 'அதனைப் பாராட்டும்' என்ருர்.

(கு - ரை.) பண்புடையார் நீதியையும் தருமத்தையும் விரும்புதலாலும், அக்காரணத்தாற் பயன்படுதலாலும், அவர் பண்பை உலகத்தார் கொண்டாடாநிற்ப ரென்பதாம். 'புரிந்த' என்ற

பெயரெச்சம், இங்குப் புரிதலர்லெனக் காரணப்பொருளதாதல் காண்க. அதனை - பண்பை. (௭)

௯௯௮. நகையுள்ளு மின்னுதிகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

பரி:—இகழ்ச்சி - (தன்னை) இகழ்தல், நகையுள்உம் இன்னாது - (ஒருவற்கு) விளையாட்டின்கண்ணும் இன்னாது; (ஆகலால்), பாடு அறிவார் மாட்டு - பிறர்பாடு அறிந்து ஒழுகுவார் மாட்டு, பகையுள்உம் - பகைமையுள்வழியும், பண்பு உள - (அஃதுஉளதாகாது இனியவாய) பண்புகளே உளவாவன.

'பாடறிவார்' எனவே, அவ்வின்னாமையறிதலும் பெற்றாம். அதனை யறிந்தவர் பின் அதுசெய்யார், இனியவே செய்வார் என்பது கருத்து. இதற்குப் பிறரெல்லாம் இரண்டுதொடரும் தம்முள் இயையாமல் உரைப்பாரும், 'இன்னாது' என்னுஞ் சொற்குப் பிறவாது என்று உரைப்பாரு மாயினர்.

(கு - ரை.) பிறருடைய இயல்புகளை யறிந்தவர் பிறர்க்கு இன்னாத இகழ்ச்சியைச் செய்யாமல் இனியவே செய்வரென்பதாம். தன்னையிகழ்தல் ஒருவற்கு விளையாட்டின்கண்ணும் இன்னாது - ஒருவன் தான் பிறரால் விளையாட்டுவகையாக இகழப்பட்டாலும் அவ்விகழ்ச்சி அவனுக்கு மனவருத்தத்தை விளைப்பதாம். பிறர் பாடு - பிறரியல்பு. அஃது - இகழ்ச்சி. அவ்வின்னாமையறிதல் - தன்னைப்பிறரிகழ்தல் தனக்கு இன்னாதாதல்போலத் தான் பிறரை இகழினும் அது அவர்க்கு இன்னாதாகுமென்னும் இயல்பை யறிதல். அதனை - அவ்வின்னாமையை: பிறரியல்பை என்பாருமுளர். அதுசெய்யார் - இகழார். உம்மைகள் - சிறப்புப்பொருளன. (௮)

௯௯௯. பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

பரி:—பண்பு உடையார் பட்டு - பண்புடையார்கண்ணே படுதலால், உலகம் உலகியல், உண்டு - (எஞ்ஞான்றும்) உண்டாய் வாராநின்றது: இன்று ஏல் - (ஆண்டுப் படுதல்) இல்லையாயின், அது—, மண் புக்கு - மண்ணின்கட்புக்கு, மாய்வது - மாய்ந்துபோவதாம்; (எ - று.)

'பட' என்பது, திரிந்துநின்றது. உலகம் - ஆகுபெயர். மற்றைப் பண்பில்லார் சார்பன்மையின் ஓர்சார்புமின்றி மண்ணின்கட்புக்கு மாயுமது வேண்டாவாயிற்று என்பதுபட நின்றமையின், மன் - ஒழியிசைக்கண் வந்தது.

இவைநான்குபாட்டானும், அதனையுடையாரது உயர்ச்சி கூறப்பட்டது.

(கு - ரை.) பண்பில்லாரோ உலகியல் நிற்பதற்குச் சார்பு ஆகாராதலால், அவ்வுலகியல் பண்புடையாரிடத்துப் படர்விடின்

தனக்கு ஓராதாரமுமில்லாமையால் மண்ணின்கட்புக்கு மாயு மென்பதாம். "உண்டாலம்ம விவ்வுலகம்****, தமக்கெனமுயலா நோன்றாட், பிறர்க்கென முயலுந ருண்மையானே" என்பது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. ஆண்டுப்படுதல் - அப்பண்புடையாரிடத்தே பொருந்துதல். உலகியல் - உலகவொழுக்கம். 'பட்டு' என்பது - 'உண்டு' என்னும் வேறு வினைமுதல் வினையைக் கொண்டு முடிதலால், அதற்கு ஏற்ப 'பட' என்ற செயவெனெச்சத்தின் திரிபு என்க. உலகம் என்பது - உலகியலைக் காட்டுதலால், இடவாகுபெயர். உலகியல் பண்புடையாரிடத்துப் படாவிடின் மண்புக்குமாயும், அது வேண்டாவாயிற்றென்ற ஒழிந்த பொருளைத் தந்தமையின், மன்-ஒழியிசைக்கண் வந்ததாம். சார்பு - ஆதாரம். வேண்டாவாயிற்று - விரும்பப்படாதாயிற்று. என்பது பட - என்ற பொருள்தோன்ற. அதனை - பண்பை. (சு)

கககஎ. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

பரி:—மக்கள் பண்பு இல்லாதவர் - நன்மக்கட்கேயுரிய பண்பு இல்லாதவர்,—அரம் போலும் கூர்மையர் ஏனும் - அரத்தின் கூர்மைபோலும் கூர்மையை யுடையரேயாயினும், மரம் போல்வர்-(ஓரறிவிற்றாய) மரத்தினை யொப்பர்; (எ - று.)

அரம் - ஆகுபெயர். ஓரறிவு - ஊற்றினையறிதல். உவமையிரண்டனுள் முன்னது - தான் மடிவின்றித் தன்னையுற்ற பொருள்களை மடிவித்தலாகிய தொழில்பற்றி வந்தது: ஏனையது, விசேடவறிவின்மையாகிய பண்புபற்றி வந்தது. அவ்விசேடவறிவிற்குப் பயனாய மக்கட்பண்பு இன்மையின் அதுதானும் இல்லையென்பதாயிற்று,

(கு-ரை.) அரம் தான் மழுங்குதலின்றித் தன்னையுற்ற பொருளைத் தேயச்செய்வதுபோல மக்கட்பண்பு இல்லாதவர், தாம் அறிவின் நுட்பத்தோடு செயல்நுட்பத்தையும்உடையவராயினும் சோர்வின்றித் தம்மை யெதிர்த்தாரைக் கெடுத்துத் தம்முடைய அறிவும் பயனற்றதாகப் பெறுவரென்பதாம். அரம் - ஒருவகை வாள். கூர்மையையுடையர்-அறிவின் நுட்பத்தோடு செயல் நுட்பத்தையுமுடையவர். அரம் - அரத்தின் கூர்மைக்கு, ஆகுபெயர். மரத்திற்கு உள்ள ஓரறிவாவது - ஊற்றினை [ஸ்பர்ஶத்தை] யறிதல். அரத்திற்கு மடிவு - கூர்மை மழுங்குதல்: தன்னையுற்ற பொருள்களை மடிவித்தல் - தன்னிடம் அராவப்பட்ட பொருள்களைத் தேயச் செய்தல். மனிதர்க்குமடிவு - சோர்தல்: தன்னையுற்ற பொருள்களை மடிவித்தல் - தன்னை எதிர்த்தவரைக் கெடுத்தல். ஏனையது- மற்றையது; இரண்டாவது உவமை. விசேடவறிவு இன்மை - விவேகமில்லாமை, மக்கட்பண்பு - நன்மக்கட்குரிய பண்பென்னுங் குணம். அதுதானும் - விசேடவறிவும். இல்லை - பயனற்றதென்ற படி. உவமையணி. (எ)

கககஅ. நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்று ராதல் கடை.

பரி:—நண்பு ஆற்றார் ஆகி - (தம்மொடு) நட்பினைச் செய்யாது, நயம் இல செய்வார்க்குஉம் - பகைமையைச் செய்தொழுகுவார்மாட்டும், பண்பு ஆற்றார் ஆதல்-தாம் பண்புடையராய் ஒழுகாமை, கடை - (அறிவுடையார்க்கு) இழுக்காம்; (எ - று.)

நயம் - ஈரம். சிறப்பு உம்மை, அவர் பண்பாற்றாமைக்கு இடனாதல் தோன்ற நின்றது. அதனைச்செய்யின் தாமும் அவர் தன்மையராவ ரென்பார், 'கடை' என்றார்.

(கு - ரை.) பகையைச் செய்வாரிடத்தும் நட்பினையே செய்ய வேண்டும்: அங்கன் ஒழுகாராவது அறிஞர்க்கு இழுக்கமென்க. அன்னார் பண்புடைய ராகாரென்றபடி. இழுக்கு - குற்றம். ஈரம் - இடனாதல் - விஷயமாதல். அதனைச் செய்யின்-பண்பாற்றாமையை மேற்கொண்டால். அவர் - நயமிலசெய்வார். (அ)

கூகூகூ. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

பரி:—நகல் வல்லர் அல்லார்க்கு -(பண்பின்மையான் ஒருவரோடுங்கலந்து) உண்மகிழ்தல் மாட்டார்க்கு, மா இரு ஞாலம் - மிகவும் பெரிய ஞாலம், பகல்உம் - (இருளில்லாத) பகற்பொழுதினும், இருள்பால் - இருளின் கண், பட்டன்று-கிடந்ததாம்.

எல்லாரோடுங் கலந்து அறியப்பெறாமையின் பண்பில்லார்க்கு உலகியல் தெரியாது என்பார் 'உலகம் இருளின்கட்பட்டது' என்றார். 'பாழ்பட்டன்றிருள்' என்று பாடமோதி, 'இருள் நீங்கிற்றன்று' என்று உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) எல்லாரோடுங் கலந்திருத்தலை அறியப்பெறாமையால் பண்பில்லார்க்கு உலகியல் தெரியாதென்பதாம். உண்மகிழ்தல் - மனம்மகிழ்தல். மாயிரு என்று புணர்ந்தது, உரிச்சொற்புணர்ச்சியாதலால். பாற்பட்டன்று என்ற இடத்து 'பாழ் பட்டன்று' என்று பாடம் ஓதி—ஞாலம் பகலினும், இருள் பாழ்பட்டன்று-இருள் நீங்கியதன்று என்று உரைப்பாருமுளர். பட்டன்று என்பது பரிமேலழகருரையில் உடன்பாட்டிறந்தகாலமுற்றும், பிறருரையில் எதிர்மறை யிறந்தகால முற்றுமாம். (க)

க000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

பரி:—பண்பு இலான் - பண்பில்லாதவன், பெற்ற - (முன்னை நல்வினையான்) எய்திய, பெரு செல்வம் - பெரிய செல்வம்,—(அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல்),—நல்பால் - நல்ல ஆன்பால், கலம் தீமையால் - (ஏற்ற) கலத்தின் குற்றத்தால், (இன்சுவைத்தாகாது), திரிந்து அற்று - கெட்டாற்போலும்; (எ - று.)

கலததீமை யென்பது, மெலிந்து நின்றது. தொழிலுவம மாகலின் பொருளின்கண் ஒத்த தொழில் வருவிக்கப்பட்டது. படைக்கும் ஆற்றலிலனுதல் தோன்ற 'பெற்ற' என்றும் எல்லாப் பயனுங் கோடற்கு ஏற்ற இடனுடைமை தோன்ற 'பெருஞ் செல்வம்' என்றுங் கூறினர். அச்செல்வமும் பயன்படாதென்ற இதனன், வருகின்ற அதிகாரப்பொருண்மையும் தோற்றுவாய் செய்யப்பட்டது.

இவை நான்கு பாட்டானும் அஃதில்லாரது இழிவு கூறப் பட்டது.

(கு - ரை.) நல்ல ஆவின்பால் தன்னையேற்ற கலத்தின் குற் றத்தால் இன்சுவைத்தாகாது திரிந்து கெட்டாற்போல, பண்பில் லான் பெற்ற பெருஞ்செல்வம் அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன் படாது கெடுமென்பதாம்: உவமையணி. முன்னை நல்வினை - முற் பிறப்பிற்செய்த புண்ணியம். அக்குற்றத்தால் - பண்பின்மை யால். ஆன்பால் - பசுவின்பால். ஏற்ற - பெய்த. கலம்-பாத்திரம். பொருளின்கண் - உபமேயத்தில். ஒத்த தொழில் - 'அக்குற்றத் தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல்' என்பது. படைக்கும் ஆற்றலிலனுதல் - தானே சம்பாதிக்கும் வல்லமையில்லாதவ னென்பது. வருகின்ற அதிகாரப்பொருண்மை - நன்றியில் செல் வத்தினியல்பு. தோற்றுவாய் செய்தல் - தொடங்குதல். அஃது இல்லார் - பண்பில்லாதவர். கலத்தீமையென்பது - கலந்தீமை யென மெலித்தல் விகாரம் பெற்று வந்தது. இது - தொழிலுவம மாதலால், 'கலத்தீமையால் பால் திரிதல்போல்' என்ற உப மானத்திற்கு ஏற்ப, உபமேயமாகிய முதல் வாக்கியத்தில், 'பண் பிலர்க் குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல்' என்ற ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. பண்பிலான் பெற்ற பெருஞ் செல்வமும் பயன்படா தென்ற இதனல், அடுத்து வருகின்ற அதி காரமாகிய 'நன்றியில் செல்வம்' என்பதற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது. (கO)

## கOக - ஆம் அதிகாரம்—நன்றியில் செல்வம்.

பரி :—அஃதாவது - ஈட்டியாற்கும் பிறர்க்கும் பயன்படுத லில்லாத செல்வத்தினது இயல்பு. உடையானது குற்றம், செல்வத்தின்மே லேற்றப்பட்டது. அதிகாரமுறைமை, மேல் தோற்றுவாய்செய்த வதனுற் பெற்ரும்.

(கு - ரை.) ஈட்டியாற்கும் - சம்பாதித்தவனுக்கும். செல்வ முடையவனது குற்றமாகிய நன்றியின்மையைச் செல்வத்தின் மேலேற்றி, நன்றியில் செல்வமென்றது - உபசாரவழக்கு. நன்றி - பயன்படுதல். செல்வம் பயன்படுதலில்லாமற்போவது பண்பில் லாமையா லாதலால் இந்த நன்றியில் செல்வம் பண்புடைமை யென்ற அதிகாரத்தின்பின் வைத்தற்கு உரியது என்பது, பண் பிலான பெற்ற பெருஞ்செல்வம் என்று கீழ்க்கூறியதனல் பெறப் படுதல் காண்க.

௧00௧. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.

பரி:—வாய் சான்ற பெரும் பொருள் - (தன்) மனையகல மெல்லாம் நிறைதற்கு ஏதுவாய பெரும்பொருளை, வைத்தான் - ஈட்டிவைத்து, அஃது உண்ணான் - (உலோபத்தால்) அதனை உண்ணாதவன், செத்தான் - (உளனாயினும்) செத்தானும்; செய கிடந்தது இல் - (அதன்கண் அவனாற்) செயக் கிடந்ததோ ருரிமை யின்மையான்; (எ - று.)

வைத்தான் என்பது, முற்றெச்சம். உண்ணுதல் - அதனான் ஐம்புலன்களையும் நுகர்தல். வாய்சான்ற பெரும்பொருளை வைத்தானொருவன் அதனையுண்ணாது செத்தவழி அதன்கண் அவனாற் செயக்கிடந்ததோருரிமையில்லை யாகலான், வையாது பெற்றபொழுதே நுகர்க வென்று உரைப்பினும் அமையும்: இதற்கு 'செத்தான்' என்பது எச்சம்.

இதனால், ஈட்டியானுக்குப் பயன்படலின்மை கூறப்பட்டது.

(கு - ரை.) பெரும்பொருளை ஈட்டிவைத்து உலோப குணத்தால் அதனையுண்ணாதவன் அப்பொருளிடத்து அவனாற் செய்யக்கூடியது ஒன்றும் இல்லாமையால் அவன் அதன் திறத்துச் செத்தவன் போல்வனே யாவனென்பதாம்: இது-முதற்பொருள்: வாய் - இடம்: இங்கே, வீட்டினகலம். ஈட்டிவைத்து - சம்பாதித்துவைத்து. உலோபம் - பணத்தின்மேலாசை: அது இறுகப்பிடிக்குந் தன்மையைக் காட்டும். அதன்கண் - அப்பொருளினிடத்து. உரிமை-சுதந்திரம். வைத்தான் என்ற வினைமுற்று, வைத்து என எச்சப் பொருள்படுதல் காண்க. அதனான் - அப்பொருளினால். ஐம்புலன்களையும் நுகர்தல் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்பொறிகட்கு உரிய ஐந்து விஷயங்களையும் அனுபவித்தல். இக்குறளுக்கு இரண்டாவது உரைவருமாறு:—வாய் சான்ற - மனையினிடமெல்லாம் நிறைதற்குக் காரணமாகிய, பெரும்பொருள்வைத்தான்—, அஃது உண்ணான்-அதனையுண்ணாது, செத்தான்-செத்தவழி, அதன்கண் அவனாற் செயக்கிடந்தது இல் என்பது. இந்த இரண்டாம் பொருளில், வாய்சான்ற பெரும்பொருளை வையாது, பெற்றபொழுதே நுகர்க என்பது, குறிப்பெச்சம். இப்பொருளில். செத்தான் என்பது செத்து எனப் பொருள்படுதலால், முற்றெச்சமாம். அஃதுஉண்ணான்-இங்கு ஆய்தம் மெய்போல ஒலித்தது. (௧)

௧00௨. பொருளானா மெல்லாமென் றீயா திவறும்
மருளானா மாணாப் பிறப்பு.

பரி:—பொருளான் - பொருள்ஒன்றும் உண்டாகஅதனால், எல்லாம் ஆம் என்று - எல்லாம் உண்டாம் என்று அறிந்து (அதனை ஈட்டி), ஈயாது இவறும் - (பின் பிறர்க்கு) ஈயாது பற்றுள்ளஞ்செய்யும், மருளான் - மயக்கத்தாலே, மாணா பிறப்பு ஆம் - (ஒருவனுக்கு) நிறைதலில்லாத பேய்ப்பிறப்பு உண்டாம்

இருமையினும் எய்தும் இன்பங்கள் பலவும் அடங்க 'எல்லாம்' என்றும், ஈட்டுதற்குமுன் உண்டாய அறிவு பின் மயங்குதலின் 'மருள்' என்றும், பொருளுண்டாயிருக்கப் பிறர்பசி கண்டிருந்த தீவினைபற்றி உணவுகளுளவாயிருக்கப் பசித்துவருந்தும் பிறப்பு உளதா மென்றுங் கூறினர்.

(கு-ரை.) உலோபகுணத்தால் பொருளை ஈயாதவர்க்குப்பொருளுண்டாயிருக்க, பிறர்பசியைத் தீர்க்காததீவினைப்பயனல் பசித்து வருந்துகின்ற பேய்ப்பிறவி யுண்டாகுமென்பதாம். பொருள் ஒன்றும் - பொருள்மாத்திரம். பற்றுள்ளம் - உலோபம். நிறைதலில்லாத - திருப்தியுண்டாகாத. பொருளானும் எல்லாம் - "அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து, தீதின்றிவந்த பொருள்," "ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கு எண்பொரு, ளேனை யிரண்டு மொருங்கு" என்றமை காண்க. (உ)

௧00௩. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

பரி:—ஈட்டம் இவறி-(யாம் பிறரின் மிக ஈட்டுதும் என்று பொருளினது) ஈட்டல் மாத்திரத்தையே விரும்பி, இசை வேண்டா - (அதன் பயனாய) புகழை விரும்பாத, ஆடவர் - மக்களது, தோற்றம் - பிறப்பு, நிலக்கு பொறை - நிலத்திற்குப் பாரமாம் அத்துணையே: (எ - று.)

இசை இருமைக்கும் உறுதியாய அறமாகலின் ஈகையான் அதனையே வேண்டல் செய்யாது ஈட்டல்துன்பத்தையுங் காத்தல் துன்பத்தையும் வேண்டிய அறிவின்மை பற்றி, 'நிலக்குப் பொறை' என்றார். 'பிறப்பு' என்றது அதற்கு உரிய உடம்பினை.

(கு - ரை.) உலோபியின்பிறவி வீணென்பதாம். பிறரின் மிக ஈட்டுதும் - அயலாரினும் அதிகமாகச்சம்பாதிப்போம். அதன் பயன் - பொருளின்பயன். அத்துணையே - அவ்வளவே. உறுதியாய அறமாகலின் என்றவிடத்து, உறுதியாதலினென்று பாடமிருப்பின் நலம். இசை இருமைக்கும் உறுதியாதலை "நிலவரை நீள்புகழாற்றின் புலவரைப், போற்றாது புத்தேளுலகு" என முன்பு விளக்கினர். தோற்றம் - தோன்றுதல்: பிறப்பு. நிலக்குப்பொறை - பூமிபாரம்: புகழென்ற அதிகாரத்தில் "இசையிலா யாக்கை பொறுத்த நிலம்" என்றதையும் அதனுரையையும் காண்க. நிலக்கு-அத்துச்சாரியை தொக்கது, விகாரம். குறளில், 'ஆடவர்' எனச் சிறப்புப்பற்றிக் கூறியிருப்பினும், பரிமேலழகர் பொதுவாக, இச்சொற்கு 'மக்கள்' என உரைவகுத்துள்ளனர்; இத்திறன் பெரிதும் பாராட்டற்பாலது: இஃது வள்ளுவரது உள்ளக் கருத்தறிந்து உரைவகுக்கும் பெற்றிமையையும பட்சபாதமின்றி உண்மை காணும் திறத்தையும் காட்டும். (௩)

௧00௪. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரான்
நச்சப் படாஅ தவன்.

பரி:—(ஒருபொருளும் ஈந்தறியாமையின்), ஒருவரால்-ஒருவராலும், நச்சப்படாதவன் - நச்சப்படுதலில்லாதவன், எச்சம் என்று-(தான் இறந்த வழி ஈண்டு) ஒழிந்து நிற்பதாக, எவ் என்னும் கொல் - யாதனைக் கருதுமோ? (எ - று.)

ஈண்டு ஒழிந்து நிற்கும் புகழ் ஈவான்மேலன்றி நில்லாமை யின் அவனுக்கு அதனேடு யாதும் இயைபில்லை யென்பார், 'என் எண்ணுங்கொல்லோ' என்ருர், ஓகாரம் - அசை.

இவை மூன்று பாட்டானும், பிறர்க்குப் பயன்படலின்மை கூறப்பட்டது.

(கு - ரை.) உலோபிக்குப் புகழுண்டாகாதென்பதாம். நச்சப் படுதல் - விரும்பப்படுதல். ஈண்டு ஒழிந்து நிற்பது - இவ்வுலகில் மிச்சமாய் நிற்பது. புகழுண்டர்தற்குக் கல்வி ஆண்மை முதலிய பிற காரணங்களும் உளவாயினும் ஈதலே சிறந்ததென்பதை, "ஈத லிசைபட வாழ்தல்," "இரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ்" என்றவற்ருலுணர்க. அவனுக்கு - ஈயாதவனுக்கு. அத ளேடு - புகழோடு. ஈண்டு ஒழிந்து நிற்குமது புகழேயென்பது "ஒன்ருவுலகத்துயர்ந்த புகழல்லாற், பொன்ருது நிற்பதொன் றில்," "இந்நிலத்துமன்னுதல்வேண்டி னிசைநடுக" என்றவற்ருல் விளங்கும். எஞ்சுவது [ஒழிந்துநிற்பது] எச்சம்: அம் - வினை முதற்பொருளது. (௪)

௧00௫. **கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய**
**கோடியுண் டாயினு மில்.**

பரி :—கொடுப்பதுஉம் துய்ப்பதுஉம் இல்லார்க்கு-(பிறர்க்கு) ஈவதும் (தாம்) நுகர்வதுமாய இரண்டு செய்கையும் உடைய ரல்லாதார்க்கு, அடுக்கிய கோடி உண்டாயின்உம்-பலவாக அடுக் கிய கோடிப்பொருள் உண்டாயினும், இல்-ஒன்றுமில்லை;(எ-று.)

இன்பத்தினும் அறம் சிறந்தமையின், கொடுத்தல் தொழில் முற்கூறப்பட்டது. 'அடுக்கிய கோடி' என்றது, ஈண்டு எண்ணப் படும் பொருள்மேல் நின்றது. ஒன்றுமில்லார் போலப் பய னிரண்டும் இழத்தலின், 'இல்' என்ருர்.

(கு - ரை.) செல்வம் படைத்ததற்குப் பயன் கொடுப்பதும் தான் நுகர்வதும்: இவ்விரண்டும் இல்லாத, உலோபிகள் செல்வம் கோடிக்கணக்காக இருப்பினும் இல்லாததேயா மென்பதாம். துய்ப்பதாலுண்டாகும் இன்பத்தினும், கொடுப்பதாலுண்டாகும் அறஞ் சிறத்தலால், 'கொடுப்பதூஉம்' என்று முற்கூறப்பட்ட தென்க. இதனல், 'வடுவிலா வையத்து மன்னிய மூன்றுள் ; நடுவண தெய்த விருதலையு மெய்தும்' என்றதில், பொருளால் இன் பம் பெறுதலினும் அறம் பெறுதல் சிறந்ததெனவுங் காட்டப் பட்டது. கோடி - எண்ணலளவையாகுபெயர். ஒன்றுமில்லார் - பொருள் சிறிதுமில்லார். பயனிரண்டும் - அறப்பயனும் இன்பப் பயனும். (௫)

௧00௬. **ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்று**
**ஈத லியல்பிலா தான்.**

பரி :—தான் துவ்வான் - தான் நுகராளுய், தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பு இலாதான் - (அதன்மேலும்) தகுதியுடை

யார்க்கு அவர் வேண்டிய தொன்றனை ஈதலியற்கையிலனுயி னுன்,—பெருஞ்செல்வம் - இரண்டுஞ் செய்தற்கு இடனுடைத் தாய செல்வத்திற்கு, ஏதம் - ஒருநோய் ; (எ - று.)

தகுதி - தானங்கோடற்கு ஏற்புடைமை. ஏதம்-ஆகுபெயர். நுகரப்படுதலும் ஈயப்படுதலு மாகிய தொழிற்கு உரியதனை அன்றாக்கினமையின், 'நோய்' என்றார். ஈதலியல்பிலாதானது பெருஞ்செல்வம் அவனுக்கு ஈட்டல் காத்தல் முதலியவற்றால் துன்பமேயா மென்று உரைப்பாரும் உளர்.

இவை யிரண்டு பாட்டானும், அவ்விருமையும் உடன் கூறப்பட்டன.

(கு - ரை.) தான் அனுபவித்தலும் தக்கார்க்கு ஈதலும் இல் லாதவன் தான் பெற்றுள்ள செல்வத்திற்கு நோயாவனென்பதாம். இனி, ஈயும் இயல்பிலாதானுக்குப் பெருஞ் செல்வம் ஈட்டல் காத் தல் முதலியவற்றால் துன்பமே விளைக்குமெனினுமாம். தான் துவ்வு தல் தக்கார்க் கொன்றுஈவதைக்காட்டிலும் செய்தற்கெளிதா யிருப் பவும் அதனையும் செய்யாத கொடுமைநோக்கி முன் கூறப்பட்டது. அதன்மேலும் - தான் நுகராமலிருப்பதற்குமேலும். ஈதலியற்கை - ஈதலாகிய இயல்பு. இரண்டு-தான் நுகர்தலும் தகுதியுடையார்க்கு ஈதலும். தானங்கோடல் - கொடுத்ததைப் பெற்றுக்கொள்ளுதல். ஏதம்- துன்பம் : இங்கே, துன்பந்தரும் நோயை யுணர்த்தியதனல், காரியவாகுபெயர். தொழிற்குரிய தல்லதாகச் செய்தல் நோயின் தன்மையாதலறிக. அவ்விருமை - ஈட்டினவனுக்குப் பயன்படுத லின்மை, பிறர்க்குப் பயன்படுதலின்மை. முதலுரையில் செல்வத் தைத் துய்த்தல் ஈதல் இலனுயினனைச் செல்வத்திற்கு நோய் போல்வானென்னது நோயென்று அபேதமாகக் கூறியது. காட்சி யணியாம். இரண்டாமுரையிலும், ஈயுமியல்பிலாதானுக்குச் செல் வம் நோய்போலு மெனனது செல்வத்தை நோயாகக்கூறியது - காட்சியணியே. "ஈட்டலுந் துன்ப மற்றீட்டிய வொண்பொருளைக், காத்தலுமாங்கே கடுந்துன்பம் - காத்தல், குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக், குறைபதி மற்றைப் பொருள்" என்ற நாலடி, இங்குக் காணத்தக்கது. (௬)

௧00௭. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ *மிகுநலம்
பெற்றா டமியண்மூத் தற்று.

பரி:—அற்றார்க்கு-(ஒருபொருளும்) இலராயினார்க்கு, ஒன்று- (அவர்வேண்டியது) ஒன்றனை, ஆற்றாதான் - கொடாதானது, செல்வம்—, (கொன்னேகழிதல்),—மிகு நலம் பெற்றாள்-(பெண் டிரின்) மிக்க நலத்தினைப் பெற்று ளொருத்தி, (கொடுப்பாரின் மையின் கொழுநனின்றி), தமியள் - தமியளாய், மூத்த அற்று - மூத்ததன்மைத்து ; (எ - று)

* பி-ம் : சிலபிரதிகளில் 'மிகநலம்' என்று காணப்படுகின்றது.

நலம்-வடிவின் நன்மையும், குணத்தின் நன்மையும். இரண்டும் ஒருங்கு பெறுதல் அரிதாகலின், 'பெற்ருள்' என்ருர். கொடுப்பாருங் கொழுநனுமே யன்றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியோடு உவமை கூறினமையின், தானும் ஏற்பானுமே யன்றிச் செல்வமும் பயனிழந்து கழியு மென்பதாயிற்று.

(கு - ரை.) உலோபியின் செல்வம் அதை ஈட்டுபவனுக்கும் அதை ஏற்றற்கு உரியவனுக்கும் பயன்படாமையோடு செல்வமும் பயனிழந்து ஒழியுமென்பதாம். கொன்னே - வீணாய்; பயன்படாமல். பெண்டிரின் - பெண்டிர்க்குரிய: மகளிருள் எனினுமாம். கொழுநன் இன்றி - கணவனில்லாமல். தமியளாய் - தனியளாய். கன்னிகாதானஞ் செய்வதனுல் ஒருவகைப் புண்ணிய முண்டாகு மென்ற நூற்கொள்கைபற்றி, 'கொடுப்பாரும் பயனிழந்து' என்றது. குமரி - கன்னிகை. ''குமரி மூத்த வென்பாத்திரம்'' என்றும், ''குமரி மூத்தவக் கொடுங்குழை நல்லாள்'' என்றும் மணிமேகலையில் வருதல் காண்க. தான் - செல்வமுடையான். ஏற்பான்-இரப்பான். (எ)

௧00அ. நச்சப் படாதவன் செல்வ நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

பரி:—(வறியார்க்கு அணியனுயிருந்தும் ஒன்றுங்கொடாமையின்), நச்சப்படாதவன்-(அவரால்) நச்சப்படாதவன், செல்வம்-செல்வமெய்துதல், ஊர் நடுவுள் நஞ்சு மரம் - ஊரிடை நிற்பதோர் நச்சுமரம், பழுத்து அற்று - பழுத்தாற்போலும்; (எ-று.)

'நடுவூர்' என்பது - பின்முன்னுகத்தொக்க ஆரும்வேற்றுமைத் தொகை. அண்மை உடைமைகளாற் பயனில்லை யென்பதாம்.

(கு - ரை.) உலோபியின் செல்வம் நடுவூருள் நச்சு மரம் பழுப்பதுபோலு மென்பதாம். அணியன் - சமீபத்திலுள்ளவன். நச்சுமரம் = நஞ்சு + மரம்; விஷத்தன்மையையுடைய மரம்: எட்டி போல்வது. நடுவூர் = ஊர்நடு: இதனை இலக்கணப்போலி யென்பர். அண்மை - சமீபித்ததல். உடைமை - பொருளுடைமையும் பழமுடைமையும். உவமையணி. ''பயன்மரமுள்ளூர்ப் பழுத்தற்ருற் செல்வ, நயனுடையான்கட் படின்'' என்ற திருக்குறளில் இதன் எதிர்மறைப் பொருளை விளக்கியமை காண்க. (அ)

௧00௯. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

பரி:—(ஒருவன்), அன்பு ஒரீஇ - (கொடாமைப்பொருட்டுச் சுற்றத்தார் நட்டார்கண்) அன்பு செய்தலை யொழிந்து, தன் செற்று - (வேண்டுவன நுகராது) தன்னைச் செறுத்து, அறம் நோக்காது - (வறியார்க்குஈதல் முதலிய) அறத்தை நினைப்பதுஞ் செய்யாது, ஈட்டிய—, ஒள் பொருள்-ஒள்ளிய பொருளை, கொள்வார் - கொண்டுபோய்ப் *பயன்பெறுவார், பிறர்—; (எ - று.)

* பி - ம்: பயன்கொள்வார்,

பயனாய அறனும் இன்பமுஞ் செய்துகொள்ளாதானுக்குப் பொருளால் உள்ளது ஈட்டற்றுன்பமே யென்பது தோன்ற 'ஈட்டிய' என்றும், அவன் வழியினுள்ளோர்க்கும் உதவாதென் பது தோன்ற 'பிறர்' என்றுங் கூறினார்.

(கு - ரை.) உலோபியின் பொருள் சுற்றத்தார் முதலோர்க்கு உதவாது பிறர்க்கே ஆகுமென்பதாம். நட்டார் - சினேகித்தவர். செறுத்து - வருத்தி. வறியார் - தரித்திரர். நோக்கல் - கருத்தினால்நோக்குதல். பயன்ஆய - பொருளினாற் பெறக்கூடிய: பிரயோசனமாகவுள்ள. அவன்வழியி னுள்ளார் - அவன் சந்ததியார். பிறர் - கள்ளர் முதலியோர். ஒன்பொருள் - இகழ்ச்சிக்குறிப்பின தென்னலாம். (௯)

௱௰௰. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

பரி :—சீர் உடை செல்வர் - புகழுடைத்தாய செல்வத்தினை யுடையவரது, சிறு துனி-நிற்குங்காலஞ்சிறிதாய வறுமை, மாரி-(உலகத்தையெல்லாம் நிலைநிறுத்தும்) மேகம், வறம் கூர்ந்து அனையது உடைத்து-வறுமைமிக்காற் போல்வதோர் இயல்பினை யுடைத்து: (எ - று.)

துனி - வெறுப்பு; அதனைச் செய்தலால், துனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டார் அதனான் வறியராயவழியும் அவ்வறுமை கடிதின் நீங்குதலின் பின்பும் செல்வராய்ப் பயன் படுவ ரென்பது, உவமையாற் பெறப்பட்டது; படவே, நன்றி யில்லாத செல்வம் எஞ்ஞான்றும் பயன்படா தென்பதாயிற்று. இதற்கு - சீருடைச்செல்வர் இரவலரோடு வெறுக்கும் நிலையில் வெறுப்பு, மாரி வறங்கூர்ந்தனைய தன்மையையுடைத்து என அதிகாரத்தோடு பொருந்தாமை மேலும்,ஓர்பொருட் டொடர்பு படாமல் உரைப்பாரும் உளர்.

இவை நான்கு பாட்டானும், அச்செல்வத்தது குற்றங் கூறப்பட்டது.

(கு-ரை.) மேகம் மழைபொழிதலால் நீரற்றவிடத்தும் மீண்டும் அந்நீரைப்பெற்றுப் பொழியுமியல்பினதாதல்போல, சீருடைச்செல்வர் பிறர்க்குப்பயன்படுதலால் வறியராயினும் விரைவில் அவ் வறுமைநீங்கிப் பயன்படுவ ரென்பது, மாரியுவமையாற் பெறப் படும்: இதனால், அதிகாரத்திற்கு ஏற்பச் சீரில்லாச் செல்வரின் பொருள் எப்போதும் பயன்படாதென்பது பெறப்படும். நிற்குங் காலஞ் சிறிது ஆய - சிறிதுகாலமே நிற்பதான. மேகத்திற்கு வறுமைமிகுதல் - நீரில்லையாதல். துனி - வெறுப்பையுண்டாக்கு வதான வறுமைக்குக் காரியவாகுபெயர். இனி, இக்குறளுக்கு, சீருடைச் செல்வரின் (பொருளின்மையால் இரவலரோடு வெறுக்கும்) வெறுப்பு, மாரி வறங்கூர்ந்தனைய துடைத்து எனப் பொருள் கூறுவாரு முளர்: அப்பொருள் நன்றியில்செல்வம் என்ற அதி காரத்திற்குப்பொருந்துவது அன்று: அன்றியும், சீருடைச்செல்

வர்க்கு இரவலரோடு வெறுப்பு ஒருபோதும் உண்டர்காதாதலால், அங்ஙனம் வெறுப்பு உளதாக வைத்துக்கூறுவது சரியன்று: மற்றும், மாரி வறங்கூர்தல் சீருடைச் செல்வரின் செல்வமின்மைக்கு உவமையாதற்கு ஏற்குமேயன்றி அவருடைய வெறுப்புக்கு உவமையாதற்கு ஏலாது: ஆதலால், பொருள் தொடர்பு படாததாகும்.

## கOஉ - ஆம் அதிகாரம்—நாணுடைமை.

பரி:—அஃதாவது - மேற்சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களான் உயர்ந்தோர் தமக்குஒவ்வாத கருமங்களில் நாணுதலுடையராந் தன்மை: அதிகாரமுறைமையும் இதனுனே விளங்கும்.

(கு - ரை.) ஒவ்வாத - தகாத. உயர்ந்தோர் நன்றியில் செல்வத்தைக்குறித்து நாணுவராதலால், நன்றியில் செல்வத்தின்பின் நாணுடைமை வைக்கப்பட்டதென்க.

கOகக. கருமத்தா னுணுத ஹுணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

பரி:—நாணு - (நன்மக்கள்) நாணுவது, கருமத்தால் நாணுதல் - இழிந்த கருமங் காரணமாக நாணுதல்; பிற - அஃதன்றி மனமொழிமெய்களது ஒடுக்கத்தான் வருவனவோவெனின் அவை, (அவரளவல்ல): திரு நுதல் நல்லவர் நாணு - அழகிய நுதலினையுடைய குலமகளிர் நாண்கள்; (எ - று.)

'பிற குலமகளிர்நாண்' என்றதனுல் ஏனையது நன்மக்கள் நாண் என்பதும், 'நாணுதல்' என்றதனுல் கருமத்தது இழிவும் பெற்றும். 'திருநுதல் நல்லவர்' என்பது, புகழ்ச்சிக்குறிப்பு. ஏதுப்பன்மைபற்றி, 'பிற' என்றார். இனி, அற்றமறைத்தல் முதலியன பொதுமகளிர் நாணோடு ஒக்குமென்று உரைப்பாரும் உளர்; அவர்க்கு நாண் கேடுபயக்கும் என விலக்கப்பட்டமையானும், *அவர்பெயராற் கூறப்படாமையானும், அஃது உரையன்மை யறிக.

இதனுன், நாணினது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) நன்மக்களுக்கு நாணுவது இழிந்த செயலின்கண் நாணுதலேயா மென்பதாம். நன்மக்கள் - நற்குணமுடையமக்கள். அஃது அன்றி-இழிந்த கரும்ங்காரணமாக நாணுதலல்லாமல். "இற்பிறந்தார்" என்ற குறளில் குடிப்பிறந்தார்க்கு நாண் - பழிபாவங்களில் மடங்குதல் என்று கூறியுள்ளமை காண்க. அவர் அளவு அல்ல - அந்நன்மக்கட்கு உரியன வல்ல. நுதல் - நெற்றி. ஏனையது - இழிகருமத்தால் நாணுதல். கருமம் என்ற பொதுச்சொல்-நாணுதல் என வருதலால், இழிந்த கருமத்தின் மேலது. புகழ்ச்சிக்குறிப்பு - புகழ்ச்சி குறித்துவந்த சொல். ஏதுப்பன்மை-ஏதுக்

* பி-ம்: அவர்பெயர் பொதுப்பெயராற் கூறப்படாமையானும்.

கள் பலவாதல்; அவை - மனவொடுக்கம், மொழியொடுக்கம், மெய்யொடுக்கம் என்பன. இனி வேறோருரை:—பிற - அற்றமறைத்தல் முதலியன, திருநுதல் நல்லவர் நாணு - பொதுமகளிர் நாணேடொக்கும் என்பது: பொதுமகளிர்க்கு நாண் கேடுதருமென்று நூல்கள் விலக்குவதாலும், 'திருநுதல் நல்லவர்' என்ற தொடர் மகளிரைப் பொதுவாகக் காட்டக்கூடியதன்றிச் சிறப்பாகப் பொது மகளிரைக் காட்டாதாதலாலும், அவ்வுரை கொள்ளத்தக்கதன்றென்று மறுத்தார். பொதுமகளிர்க்குநாண் கேடுதரு மென்பதை "மானமுறும் வேசையரும், ஈனமுறுவார்" என்றதனாலும் அறியலாம். அற்றம்மறைத்தல் - மறைக்கத்தக்க அவயவத்தை மறைத்தல். பொதுமகளிர் - விலைமாதர். பயக்கும் - தரும். (௧)

௧0௧௨. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

பரி:—ஊண் - ஊணும், உடை - உடையும், எச்சம்-அவை யொழிந்தனவும், உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல - மக்களுயிர்க்கெல்லாம் பொது : மாந்தர் சிறப்பு-நன்மக்கட்குச் சிறப்பாவது, நாண் உடைமை - நாணுடைமையே : (அவையல்ல); (எ - று.)

அவை ஒழிந்தன - உறக்கமும், அச்சமும், காமமும். சிறப்பு-அவ்வுயிர்களின் வேறுபாடு. 'அச்சம்' என்று பாடம் ஓதுவாரும் உளர்.

(கு - ரை.) ஊண் உடை முதலியன மக்கட்கெல்லாம் பொதுவாக இருக்க, நாணுடைமையே நன்மக்கட்குச் சிறப்பு என்பதாம். ஊண் - உணவு உடை - ஆடை. அவை - ஊண் உடை முதலியன. அவ்வுயிர்களின் வேறுபாடு - மற்றை யுயிர்களினும் இவர்கட்குள்ள வித்தியாசம். (௨)

௧0௧௩. ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு.

பரி:—உயிர் எல்லாம் - எல்லாவுயிர்களும், ஊனை - உடம்பினை, குறித்த-(தமக்கு) நிலைக்களனாகக் கொண்டு அதனை விடா : (அதுபோல), சால்பு—, நாண் என்னும் நன்மை குறித்தது - நாணென்னும் நன்மைக் குணத்தை(த் தனக்கு) நிலைக்களனாகக் கொண்டு அதனை விடாது ; (எ - று.)

உடம்பு என்பது - சாதியொருமை. நன்மை - ஆகுபெயர். உயிர் உடம்பொடு கூடியல்லது பயனெய்தாதவாறுபோல, சால்பு நாணொடுகூடியல்லது பயனெய்தாது என்பதாம். 'ஊணைக் குறித்த' என்று பாடம் ஓதுவாரும் உளர்.

(கு - ரை.) சால்பு நிலைக்கும் இடம் நாணே யென்பதாம். நிலைக்களன் - தங்குமிடம். ஊன் - உடம்பு. நன்மை - நற்குணத்துக்கு ஆகுபெயர். 'ஊணைக்குறித்த' என்ற பாடத்துக்கு - (எல்லா வுயிர்களும்) உணவையே (தமக்கு)ஜீவாதாரமாகவுடையன என்று பொருள். (௩)

க0கச. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃ தின்றேல்
பிணியன்றோ பீடு நடை.

பரி :—சான்றோர்க்கு—, நாண் உடைமை—, அணி அன்றுஓ-ஆபரணமாம்; அஃது இன்று ஏல் - அவ்வாபரணம் இல்லையாயின், பீடு நடை-(அவர்) பெருமிதத்தையுடைய நடை, பிணி அன்றுஓ-(கண்டார்க்குப்) பிணியாம்; (எ - று.)

அழகுசெய்தலின் 'அணி' என்றும், பொறுத்தற்கு அருமையின் 'பிணி' என்றுங் கூறினர். ஓகார இடைச்சொற்கள், எதிர்மறைக்கண் வந்தன.

இவைமூன்றுபாட்டானும், அதன் சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) நாணுகிய ஆபரணம் இல்லார்க்குப் பெருமித நடை சிறப்புரு தென்பதாம். பெருமிதத்தையுடைய நடை - கம்பீரமானநடை. அன்று ஓ-தேற்றம்: இரண்டு எதிர்மறைச்சொற்கள் தொடர்ந்து உடன்பாட்டுப் பொருளை யுணர்த்தித் தேற்றக் கருத்தை விளக்கின. அதன் - நாணின். (ச)

க0கரு. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்கு
உறைபதி யென்னு முலகு.

பரி :—பிறர் பழிஉம் - பிறர்க்குவரும் பழியையும், தம் பழி உம் - தமக்கு வரும் பழியையும், (ஒப்பமதித்து), நாணுவார் - நாணுவாரை, உலகு - உலகத்தார், நாணுக்கு—, உறை பதி என்னும் - உறைவிட மென்று சொல்லுவர்: (எ - று.)

ஒப்பமதித்தல் - அதுவும் தமக்கு வந்ததாகவே கருதுதல். அக்கருத்து உடையார் பெரியராகலின், அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வரென்பதாம்.

இதனுல், அதனையுடையாரது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வந்த பழி போல மதித்து நாணுவாரே நாணுக்கு உறைவிடமாவரென்பதாம். உறைவிடம் - தங்குமிடம். ஒப்ப - ஒருநிகராக. அதனை - நாணினை.

கூகசு. நாண்வேலி கொள்ளாது மன்னே வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

பரி :—மேலாயவர்-உயர்ந்தவர்,—வேலி நாண் கொள்ளாது-(தமக்கு) ஏமமாக நாணினைக் கொள்வதன்றி, வியல் ஞாலம் பேணலர் - அகன்ற ஞாலத்தைக்கொள்ள விரும்பார்; (எ - று.)

பழிபாவங்கள் புகுதாமற் காத்தலின், 'வேலி' என்றார். நாணும் ஞாலமும் தம்முள் மாறுயவழி அந்நாணினைக் கொள்வதல்லது அவை புகுதும் நெறியாய ஞாலத்தினைக் கொள்ள விரும்பா ரென்பதாம். மன்னும், ஓவும் - அசை. நாணுகிய

வேலியைப் பெற்றல்லது ஞாலம்பெற விரும்பா ரென்று உரைப் பாரும் உளர்.

(கு - ரை.) ஞாலத்தினும் நாணினை மேலாகக் கொள்வ ரென்பது, முதலுரையின் கருத்து. ஏமம் - இரட்சகம் : பாதுகாப்பு. ஞாலம் - உலகம். அவை புகுதும் நெறி - பழி பாவங்கள் புகும் வழி. இக்குறளுக்கு வேறோருரை வருமாறு :—மேலாயவர் - மேலோர், நாண் வேலி - நாணாகிய வேலியை, கொள்ளாது-பெற்றல்லாமல், வியல் ஞாலம் - பெரிய உலகத்தை, பேணலர் - பெற விரும்பாரென்பது : நாணுடனேதான் ஞாலத்தைப் பெற விரும்புவரென்பது இவ்வுரையின் கருத்து. வியல் - அகலமென்னும் பொருளுணர்த்தும் உரிச்சொல். (௬)

௯0௭. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டால்
நாண்டுறவார் நாணாள் பவர்.

பரி :—நாண் ஆள்பவர்-நாணினது சிறப்பு அறிந்து அதனை விடாது ஒழுகுவார், (அந்நாணும் உயிரும் தம்முள் மாறுயவழி), நாணால் - நாண்சிதையாமைப் பொருட்டு, உயிரை துறப்பர் - உயிரைநீப்பர்; உயிர்ப்பொருட்டு-உயிர்சிதையாமைப்பொருட்டு, நாண் துறவார் - நாணினை நீக்கார் ; (எ - று.)

உயிரினும் நாண் சிறந்தது என்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், அவர்செயல் கூறப்பட்டது.

(கு - ரை.) உயிரைக்காட்டிலும் நாணே சிறந்த தென்பது, இக்குறளின் கருத்து : "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" என்று, தொல்காப்பியத்துப் பொருளதிகாரக் களவியலில் வருகின்றது. நாணும் உயிரும் தம்முள் மாறுஆயவழி - நாண் உயிர் என்ற இரண்டனுள் ஏதாவதொன்றை நீக்க நேர்ந்தபோது என்றபடி. நீப்பர் - விடுவர். அவர் - நாணுடையவர். நாணால் - நாணின் பொருட்டு ; மூன்றும் வேற்றுமை நான்காம்வேற்றுமைக்குரிய பொருட்டுப்பொருளில் வந்தது. பொருட்டால், ஆல் - அசை. (எ)

௯0௮. பிறர்நாணத் தக்கது தானுணா னாயின்
அறநாணத் தக்க துடைத்து.

பரி :—பிறர் - கேட்டாரும் கண்டாரும், நாணத் தக்கது - நாணத்தக்க பழியை, (ஒருவன்), தான் நாணான் ஆயின் - தான் நாணாது செய்யுமாயின், (அந்நாணமை), அறம் நாணத்தக்கது உடைத்து - (அவனை) அறம்விட்டு நீங்கத்தக்க குற்றத்தினை யுடைத்து ; (எ - று.)

தான் எனச் செய்வானைப் பிரிக்கின்றாராகலின், 'பிறர்' என்றார். நாணோடு இயைபில்லாதானை அறம் சாராது என்பதாம்.

(கு - ரை.) பழிக்கு நாணாதானை அறம்விட்டு நீங்குமென்பதாம். செய்வானை - கண்டாரும் கேட்டாரும் நாணத்தக்க பழியைச் செய்

பவனை. பிறர்-கண்டாரும் கேட்டாரும். இப்பாட்டில் உடைத்து என்ற முற்றுக்கு, அந்நாணுமை என எழுவாய் வருவிக்க. நாண என்பது - விட்டு நீங்க என்ற பொருளது; இலக்கணை. (அ)

௧0௧௯. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை.

பரி:—கொள்கை பிழைப்பின் - (ஒருவனுக்கு) ஒழுக்கம் பிழைக்குமாயின், (அப்பிழைப்பு), குலம் சுடும் - அவன்குடிப் பிறப்பு ஒன்றனையுங் கெடுக்கும்; நாண் இன்மை நின்றக்கடை - (ஒருவன்மாட்டு) நாணின்மை நின்றவழி, (அங்கிலே), நலம் சுடும்- அவன் நலம் யாவற்றையுங் கெடுக்கும்; (எ - று.)

நிற்றல் - ஒருபொழுதும் நீங்காமை. நலம் - சாதிபொருமை: ஆகலின், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனம் என்றிவற்றுன் வந்தனவெல்லாம் கொள்ளப்படும். ஒழுக்கவழிவினும் நாணழிவு இறப்பத் தீது என்பதாம்.

(கு - ரை.) ஒழுக்கவழிவு குலம் ஒன்றனையும் கெடுக்க, நாணின்மையோ பிறப்பு கல்வி குணம் செயல் இனம் இவற்றுடைய நலத்தை யெல்லாம் கெடுத்தலால், ஒழுக்கவழிவினு நாண அழிவு மிகவும் தீது என்பதாம். பிழைக்கும் - தவறும். பிழைப்பு - தவறுதல். குடிப்பிறப்பு ஒன்றனையும் - குடிப்பிறப்பைமாத்திரம். இறப்ப - மிகவும். (௯)

௧0௨0. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

பரி:—அகத்து - (தம்) மனத்தின்கண், நாண் இல்லார் - நாணில்லாத மக்கள், இயக்கம்-(உயிருடையார்போன்று இயங்குகின்ற) இயக்கம்,—மரம்பாவை-மரத்தாற்செய்த பாவை,நாணால்- (இயந்திரக்) கயிற்றினுடைய (தன்) இயக்கத்தால், உயிர் மருட்டி அற்று - உயிருடைத்தாக மயக்கினாற்போலும்; (எ - று.)

கருவியே கருத்தாவாயிற்று, நாணில்லாத மக்களியக்கம் நாணுடைய பாவையியக்கம் போல்வதல்லது உயிரியக்கமன்று என்பதாம்.

இவை மூன்று பாட்டானும், நாணில்லாரது இழிவு கூறப்பட்டது.

(கு - ரை.) நாணைப்பெற்றிராத மக்களியக்கம் சூத்திரக்கயிறுள்ள மரப்பாவையின் இயக்கம்போலுமே யல்லாமல், உயிர்ப் பயனைப்பெற்றுள்ள இயக்க மாகா தென்பதாம். இயக்கம்-புடைபெயர்ச்சி. மரப்பாவையென்பது கயிறுகொண்டு ஆட்டுவோர் பிறரைமயக்குதற்குக் கருவியாவதல்லது கருத்தாவாகாதாயினும், இங்கு 'பாவை மருட்டியற்று' என்று பாவையைக் கருத்தாவாகக் கூறியிருத்தலால், 'கருவியே கருத்தாவாயிற்று' என்றார். "செயப்

இகழ்ந்தெள்ளாது எனவே, நன்குமதித்தலும் இனியவை கூறலும் பெறுதும். நிரப்பிடும்பை கெடுதலளவேயன்றி 'ஐம் புலன்களானும் பேரின்பமெய்தினராகக் கருதலான் உள்ளு ளுவப்பதுடைத்து' என்றார்.

இவை ஐந்து பாட்டானும் அவ்விரத்தக்காரது இயல்பு கூறப்பட்டது.

(கு - ரை.) இரப்பாரை இகழாது நன்குமதித்து இன்சொல் லுடன் கொடுக்குங் கொடையாளியைக் கண்டால், இரப்போரி னுள் ளம் பேரின்பமுறுமென்பதாம். உள்ளுள்ளே - மனத்திற்குள்ளேயே. இகழ்ந்தெள்ளாது என்ற இடத்து எதிர்மறை 'இகழாது எள் ளாது' என ஈரிடத்தும் சேர்தலால், இகழாது என்பதனால் நன்கு மதித்தலும், 'எள்ளாது' என்பதனால் இனியவை கூறலும் பெறப் படும். பெறுதும் - பெறுவோம். ஈவாரைக் கண்டபோதே இரப் பார்க்கு நிரப்பிடும்பை [வறுமைத்துன்பம்] கெடுதல் மாத்திரமன்றி, அக்கொடையாளரால் தாம் பெரும் பொருள் பெறலாமென்ற கருத் தினால், மெய் வாய் முதலிய பஞ்சேந்திரியங்களும் பேரின்பத்தைப் பெற்றனவாகவே அவரால் கருதப்படுமென்க. ஐம்புலன்களானும்- ஐம்பொறிகளா லனுபவித்தற்கு உரிய ஐந்து விஷயங்களாலும். அவ்விரத்தக்கார் - இரப்போரை நன்கு மதித்து இன்சொற்சொல் லிக் கரவாது ஈயுமவர். (எ)

௧0௫௮. **இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்**
**மரப்பாவை சென்றுவந் தற்று.**

**பரி:**—இரப்பார் - (வறுமையுற்று) இரப்பார், இல் ஆயின் - இல்லையாயின், ஈர் கண் மா ஞாலம்-குளிர்ந்த இடத்தையுடைய பெரிய ஞாலத்துள்ளார், (செலவு வரவுகள்), மரம் பாவை - (உயிரில்லாத) மரப்பாவை, சென்று வந்து அற்று - (இயந்திரக் கயிற்றால்) சென்று வந்தாற்போலும்; (எ - று.)

ஐகாரம் - அசைநிலை. ஞாலமென்னும் ஆகுபெயர்ப் பொரு ட்கு உவமையோடொத்த தொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத் துள்ளாரென்றது - அவரை யொழிந்தாரை. அவர்க்கு ஈதலைச் செய்து புகழும் புண்ணியமும் எய்தாமையின், உயிருடையரல்ல ரென்பதாம். "ஈவாரும் கொள்வாருமில்லாத வானத்து, வாழ் வாரே வன்கணவர்" என்றார் பிறரும். இத்தொடையின்பம் நோக்காது இரப்பவரில்லாயின் என்று பாடம் ஓதுவாருமுளர்.

(கு-ரை.) தம் புகழ்க்குக் காரணமான இரப்பாளரைப் பேணாத செல்வரினியக்கம் உயிரில்லாமரப்பாவையினியக்கம்போலப் பய னற்றதாம். இயந்திரக்கயிறு மரப்பாவையை ஆட்டுவிக்குஞ்சூத்திரக் கயிறு- இரப்பாரை என்ற இடத்திலுள்ள ஐகாரம் அசைநிலையா கும். ஞாலம்-ஞாலத்திலுள்ளார்க்கு இடவாகுபெயர். ஞாலத்துக்கு உவமை மரப்பாவை. மரப்பாவையாகிய உவமையில் 'சென்றுவந்த ற்று' என்று செலவுவரவுகள் கூறப்பட்டிருத்தலால், உபமேயமாகிய

'ஞாலம்' என்பதற்கும் ஞாலத்திலுள்ளாரது செலவு வரவுகள்' என உரைக்கப்பட்டதென்க. அவரை யொழிந்தாரை - இரப்பவரை யொழிந்தவரை: இரப்பவரைத் தனியே கூறிவிட்டதனால், அவரை ஒழிந்தாரைக்கொள்வதே ஏற்புடையதாகு மென்க. மானிடராகப் பிறவிபடைத்ததற்குப்பயன் புகழும் புண்ணியமுமே ஆதலாலும், இரப்பாரில்லாவிடின் கொடுத்தலில்லையலாகும் புகழும் புண்ணியமும் அடையமுடியா ஆதலாலும் மானிடப்பிறவியின் பயனே அற்றதா மாதலால், இரப்பாரைப்பெறாத அப்போது செல்வர்களியக்கம் உயிரற்ற மரப்பாவையியக்கம்போலு மென்றார். "ஈவாரும்" என்று தொடங்கும்மேற்கோள் உள்ள இடம் விளங்கவில்லை: இதன்பொருள்—ஈவாரும்-கொடுப்பவரும், கொள்வாரும்-பெற்றுக்கொள்பவரும் (என்னும்) இருவரையும், இல்லாத - பெறாத, வானத்து - சுவர்க்கலோகத்து, வாழ்வாரே - வாழ்பவரே, வன்கணவர் - கொடுமையையுடையோரென்பது. "புத்தேளுலகத்து" (உகரு) என்னும் குறளினுரையில் ஈவாரும் ஏற்பாரும் இன்றியே எல்லாரும் ஒருதன்மையராதலின்" என்று பரிமேலழகரே உரைத்திருப்பது இங்குக் கருதத்தக்கது. இரப்பாரை...... மரப்பாவை என்ற பாடத்தை விட்டு, இரப்பவர்........மரப்பாவை' என்று பாடங்கொள்ளின், எதுகைத்தொடையின்பம் கெடுதல் காண்க. (அ)

கO௬௯. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்
மேவா ரிலாஅக் கடை.

பரி :—இரந்துகோள் - (அவர்பாற்சென்று ஒன்றனை) இரந்து கோடலை, மேவார் - விரும்புவார், இலாஅக்கடை - இல்வழி, ஈவார்கண் - கொடுப்பார் மாட்டு, என் - என்ன, தோற்றம் - புகழ், உண்டாம்—? [யாதுமில்லை]; (எ - று.)

தோற்றம்-ஆகுபெயர். மேவுவாரென்பது விகாரமாயிற்று. கொடுத்தல் வன்மை வெளிப்படாமையின், அதனாற் புகழெய்தாரென்பதாம்.

இவை யிரண்டு பாட்டானும், உலகிற்கு இரப்பார் வேண்டுமென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) இரப்பவரில்லையாயின் ஈவாரின் வண்மைப்புகழ் வெளிப்படாதென்பதாம். அவர்பால் - ஈவாரிடத்து, தோற்றம்-விளங்கிக் காணப்படுதல் : அங்ஙன் விளங்கிக் காணப்படுதலையுடைய புகழுக்கு, ஆகுபெயர். செய்யுளில் 'மேவார்' என்பது - மேவுவாரென்பதன்விகாரமான சொல். கொடுத்தல் வன்மை - கொடுக்கின்ற உறுதி : கொடுத்தல் வண்மை என்றபாடமு முண்டு. அதனால் - கொடுத்தலினால். (கூ)

கOசுO. இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.

பரி :—(ஈவானுக்குப் பொருளுதவாவழி 'இவன் எனக்கு ஈகின்றிலன்' என்று அவனை), இரப்பான்—, வெகுளாமை-

வெகுளாதொழிதல், வேண்டும்—: (அது வேண்டிய பொழுது உதவாதென்பதற்கு வேறு சான்று வேண்டா:) நிரப்பு இடும்பை - நிரப்பாகிய தன்னிடும்பை, தானேஉம்—, கரி - சான்ருதல், சாலும் - அமையும்; (எ - று.)

யாவர்க்கும் *தேடவேண்டுதலும் நிலையின்மை முதலிய பிற சான்றும் உண்டு என்பது பட நின்றமையின், உம்மை - எச்சவும்மை. தனக்கேயன்றி, மற்றையிரந்தாற்கும் அற்றைக் கன்று பொருள் கடைக்கூட்டற்கு அவனுறுந் துன்பத்தைத் தனக்கேயாக வைத்துத் தானுறுந் துன்பம் தானறிந்து வெகுளற்க வென்பதாம்.

இதனான் அவற்கு இன்றியமையாததோரியல்பு கூறப்பட்டது.

(கு - ரை.) தன்னைப்போலவே ஈபவனுக்கும் ஒருகால் பொருள் முட்டுப்படலாமென்று கருதி, இரப்போன், கொடாமைக்காகக் கொடையாளியின்மீது வெகுளலாகாதென்பதாம். ஈவானுக்கு - கொடுப்பவனுக்கு. பொருள்உதவாவழி - பணம் (கையிற் கிடைக்காமையால்) உதவாதிருக்கும்போது, அவனை - பொருள் (உதவாமையால்) கொடுக்கமாட்டாத) ஈவானை, அது - பொருள். சான்று - சாட்சி. அமையும் - பொருந்தும். யாவர்க்கும் - எத்துணைச் செல்வர்க்கும். தேடவேண்டுதலும் - பொருள் சிலகாலத்தில் கையிற்கிடையாமையால் தேடவேண்டியிருத்தலும். நிலையின்மை - பொருளின்தன்மை நிலைத்திராததாதல். 'தானேயும்' என்ற இடத்து உம்மை-யாவரிடத்தும் தேடவேண்டுதலும், நிலையின்மை முதலிய பிறசான்று முண்டாயினும் என்பதுபடநின்றதமையால், எச்சவும்மையாம். இறந்தது தழுவிய எச்சமென்னலாம்; எதிரதுதழுவியது என்பாருமுளர். கடைக்கூட்டல்- முயன்றுசேர்த்தல். அவனுறுந் துன்பம் - ஈவான் அடையும் முயற்சி வருத்தம். தனக்கேயாகவைத்து - தனக்கே வந்ததாக வைத்து: தன்பொருட்டே படுவதாகவைத்து என்பாருமுளர். அவற்கு - இரப்பாற்கு. இயல்பு - தன்மை, "புள்ளும்பொழுதும் பழித்தலல்லதை, யுள்ளிச்சென்றோர்ப் பழியலர்" என்ற புறநானூறும், "பிச்சைபுக்குண்பான் பிளிருமை முன்னினிதே" என்ற இனியவை நாற்பதும் ஈண்டு அறியத்தக்கன. (௧0)

## ௧0எ - ஆம் அதிகாரம்—இரவச்சம்.

பரி:—அஃதாவது - மானம் தீர வரும் இரவினை யஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) மானம்தீர - மானம்விட்டு நீங்க. இரவினை - பிச்சையெடுத்தல் தொழிலுக்கு.

* பி - ம். வேண்டுதலும், நிலையின்மையும்.

கOசுக. **கரவா துவந்தீயுங் கண்ணன்னர் கண்ணும்**
**இரவாமை கோடி யுறும்.**

பரி :—கரவாது - (தமக்கு உள்ளது) கரவாது, உவந்து - (இவர் வரப்பெற்றேமென்று) உண்மகிழ்ந்து, ஈயும்-கொடுக்கும், கண் அன்னார் கண் உம் - கண்போலச் சிறந்தார் மாட்டும், இரவாமை - இரவாதே (ஒருவன்) வறுமை கூர்தல், கோடி உறும் - (இரந்து செல்வமெய்தலிற்) கோடிமடங்குநன்று; (எ - று.)

நல்குரவு மறைக்கப்படாத நட்டார் மாட்டும் ஆகாதென்பது பட நின்றமையின், உம்மை - உயர்வுசிறப்பின்கண் வந்தது. அவ்விரவான் மானந்தீராதென்னுந் துணையல்லது அதற்கு மிகுதி கூடாமையின், வல்லதோர் முயற்சியான் உயிரோம்பலே நல்லதென்பது கருத்து.

(கு - ரை.) கரவாதுகொடுக்கும் மனமொத்த நண்பரிடத்தும் இரவாது தம்முயற்சியால் உயிரைக்-காத்தலே சிறப்புறுமென்பதாம். இவர் - இவ்விரப்பவர். உண்மகிழ்ந்து - மனமகிழ்ந்து, செல்வமெய்தலின் - பணம் அடைவதைக்காட்டிலும். நல்குரவு-[தன்] வறுமையை. நட்டார் - சினேகிதர். ஆகாது என்பதற்கு 'இரவு' என்னும் எழுவாய் வருவிக்க. "ஏற்ப திகழ்ச்சி" என்றதும் இங்கு நோக்குக. 'கண்ணன்னார் கண்ணும்' என்ற இடத்து உம்மை, உயர்வுசிறப்பில் வந்தது, மானம்தீராதென்னுந் துணையல்லது - மானம் போகாதென்ற அவ்வளவுமாத்திரமன்றி, அதற்கு மிகுதி - அதனினும் மிக்கது. வல்லது - (தான்) செய்யத் தக்கது. (க)

கOசுஉ. **இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து**
**கெடுக வுலகி யற்றியான்.**

பரி :—உலகு இயற்றியான்-இவ்வுலகத்தைப் படைத்தவன், (இதன்கண் வாழ்வார்க்கு முயன்று உயிர்வாழ்தலையன்றி), இரந்தும்—, உயிர்வாழ்தல் - உயிர்வாழ்தலை, வேண்டின் - வேண்டி விதித்தானாயின், (அக்கொடியோன்தானும்), பரந்து-(அவரைப் போன்று) எங்கும் அலமந்து, கெடுக - கெடுவானாக; (எ-று.)

மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டுவதாய உண்டியும் அதற்கு ஏதுவாய செய்தொழிலும் பழவினை வயத்தாற் கருவொடு கலந்தவன்றே அவன் கற்பிக்குமன்றே? அவற்றுட் சிலவுயிர்க்கு இரத்தலையும் ஒருசெய்தொழிலாகக் கற்பித்தானாயின், அத்தீவினையால் தானும் அத்துன்பமுறல்வேண்டுமென்பதாம்.

இவையிரண்டு பாட்டானும், அவ்விரவின் கொடுமை கூறப்பட்டது.

(கு - ரை.) படைத்தற் கடவுள் படைக்கும்போது சிலவர்க்கு இரத்தலைச் செய்தொழிலாகக் கற்பித்தானாயின், அக்கடவுள் அங்ஙன் கற்பித்த தீவினைப்பயத்தினால் அவ்விரத்தல்துன்பத்தை யனுபவிக்கக் கடவனென்று படைத்தற் கடவுளைச் சபிப்பதுபோலச்

செய்யப்பட்டது இச்செய்யுளென்க. இதன்கண் - இவ்வுலகில், விதித்தான் - ஏற்படுத்தினன், அக்கொடியோன் தானும் என்று பிரமனை கூறியது - இரந்தேவாழவேணுமென்று விதித்தானென்று அவன்மீதுகொண்ட சினம்பற்றி. அவரை - அவ்விரப்போரை. அலமந்து - சுழன்று; திரிந்து என்றபடி. கெடுக - வியங்கோள்; சபித்தற் பொருளது. அதற்கு - வாழ்நாளுக்கு. உண்டி-உணவு: அதற்கு - உணவிற்கு. கருவொடுகலந்த அனறே - கருப்பத்திற் சேர்ந்த அன்றைக்கே. அவன் - உலகியற்றியான்; பிரமன். கற்பிக்கும் - உண்டாக்கிவைப்பான்: அத்தீவினையால் - (சிலர்க்கு இரத்தலையும் உண்டிக்கு ஏதுவான) செய்தொழிலாகச் செய்த அந்தத் தீவினையின் பயனால், தானும் - பிரமனும். இக்குறளால், உலகியற்றியான் ஒருவனுளன் என்பதும், அவனே, மக்களுயிர்க்குக் கருவோடு கலந்தவன்றே செய்தொழிலைவிதிக்கின்றா னென்பதும் வள்ளுவர்க்குடன்பாடு என்பதுதேற்றமாயிற்று. இந்தக் 'கருவொடு கலந்த செய்தொழிலைத்தான் (சாதிகருமம்) 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்' என்ற விடத்தும் வள்ளுவர் கூறினரேயன்றி வேறின்று; 'செய்தொழில்' என்று வள்ளுவர் பிரயோகித்ததன் ஆழ்பொருளை யுணரவேண்டு மென்றே, பரிமேலழகர், இக்குறளுரையிலும் 'உண்டியும் அதற்கேது வாய செய்தொழிலும் பழவினைவயத்தாற் கருவொடு கலந்தவன்றே அவன் கற்பிக்கு மன்றே'' என்றார்; எனவே, 'செய்தொழில்' என் பது முக்காலத்துக்குமொத்தியல்வதாக, உலகியற்றியானால் கற் பிக்கப்படுவதென்பது நன்கு உணரக்கடவது. உலகியற்றியான் என்பதை''ஆதிடகவன்' எனக்கொள்ளினும் இழுக்காது. (உ)

௧0௬௩. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

பரி:—இன்மை - வறுமையான் வரும், இடும்பை - துன் பத்தை, (முயன்று நீக்கக்கடவே மென்று கருதாது), 'இரந்து—, தீர்வாம் - நீக்கக்கடவேம்', என்னும் - என்றுகருதும், வன்மை யின் - வன்மைபோல, வன்பாட்டது-வலிமைப்பாடு உடையது, இல் - பிறிதில்லை; (எ - று.)

நெறியாய முயற்சி நிற்க, நெறியல்லாத இரவால் தீர்க்கக் கருதுதலின், வன்மையாயிற்று, வன்பாடு - முருட்டுத்தன்மை. அஃதாவது - ஓராது செய்துநிற்றல்.

இதனான், வறுமை தீர்தற்குநெறி இரவன்றென்பது கூறப் பட்டது.

(கு - ரை.) பரிமேலழகியாரே 'வறுமைதீர்தற்கு நெறி இர வன்று' என இக்குறளின் கருத்தைத் தெளிவாகக் கூறியுள்ளார். இரந்து - யாசித்தல்தொழிலைமேற்கொண்டு. வன்மை - கொடுமை, நெறியாய முயற்சி நிற்க - நேர்வழியான முயற்சி யிருக்க. இரவால்- யாசகத்தால். ஓராது - ஆராய்ச்சியில்லாமலே; பிடிவாதமாக என்றபடி. (௩)

௧0௬௪. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.

பரி :—இடம் இல்லாக்கால்உம் - நுகரவேண்டுவன இன்றி நல்கூர்ந்தவழியும், இரவு - (பிறர்பாற் சென்று) இரத்தலை, ஒல்லா - உடம்படாத, சால்பு - அமைதி,— இடம் எல்லாம் - எல்லாவுலகும், கொள்ளா - (ஒருங்கு இயைந்தாலும்) கொள்ளாத, தகைத்துஏ - பெருமை யுடைத்து ; (எ - று.)

அவ்விரத்தலைச் சால்பு விலக்குமாகலின், இரவொல்லாமை அதன்மே லேற்றப்பட்டது.

இதனான், அந்நெறியல்லதனைச் சால்புடையார் செய்யாரென்பது கருத்து.

(கு - ரை.) நுகரவேண்டுவன அடியோடு கிடைக்காத வறுமைக் காலத்தும் இரத்தலைமேற்கொள்ளாத அமைதி இவ்வுலகங்களுள் அடங்காத பெருமையை யுடைய தென்பதாம். நுகரவேண்டுவன - அனுபவிக்க உரியன. நல்கூர்ந்தவழியும் - தரித்திரப்பட்ட போதும. பிறர்பால்-அயலாரிடத்து. சால்பு-அடங்கிய தன்மை. இரத்தலைச் சால்பு விலக்கு மாதலால், இரவொல்லாமையையும் சால்பையும் அபேதப்படுத்தி ‘இரவொல்லாச் சால்பு’ என்று கூறினர்: காரியத்தைக் காரணமாகக்கூறிய உபசார வழக்கின் பாற்படும். அந்நெறியல்லதனை - பிழைப்புக்கு நேர்வழியாகாத அந்த இரத்தல்தொழிலை. (௪)

க0௬ரு. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாட்டந்தது
உண்ணலி னூங்கினிய தில்.

பரி :—தாள் - (நெறியாய) முயற்சி, தந்தது - (கொடுவந்து) தந்தது, தெள்நீர் - தெளிந்நீர் போலும், அடு புற்கை ஆயின் உம் - அடுபுற்கையேயாயினும், உண்ணலின் - (அதனை) உண்டற்கு, ஊங்கு - மேல், இனியது இல் - இனியதில்லை ; (எ - று.)

தாள் தந்த கூழ் செறிவின்றித் தெண்ணீர் போன்ற தாயினும், இளிவாய இரவான் வந்த தன்றித் தம்முடைமை யாகலின், அமிழ்தத்தோ டொக்கு மென்பதாம்.

இதனான், நெறியினானாயது சிறிதேனும், அதுசெய்யும் இன்பம் பெரிதென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) ஒருவனுக்கு இரப்பினாலன்றி முயற்சியாற் கிடைத்தது நீர்போன்ற கூழாயினும் அது அமிழ்தம்போன்று இனிதாகு மென்பதாம். அடுபுற்கை - சமைத்த கூழ். தாள்தந்த கூழ் - முயற்சியினாற் கிடைத்த கூழ். செறிவின்றி - கெட்டியாக இல்லாமல். தம்முடைமை - தம்முயற்சியாற் பெற்ற பொருள்: சிறிதேனும்- அற்பமான பொருளே யாயினும். அது - அச்சிறுபொருள். (ரு)

க0௬௬. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்கு
இரவி னிளிவந்த தில்.

பரி :—ஆவிற்கு - (தண்ணீர் பெறுது இறக்கும் நிலைமைத்தாயதோர்) ஆவினை(க் கண்டு), நீர் என்று-(அறங்நோக்கி இதற்குத்) தண்ணீர் (தரல்வேண்டும்) என்று, இரப்பின்உம் - இரந்து சொல்லுங்காலும், இரவின் - அவ்விரவுபோல, நாவிற்கு - (ஒருவன்) நாவிற்கு, இளிவந்தது—, இல் - பிறிதில்லை ; (எ - று.)

ஆகாத்தோம்பல் பேரற மாகலின் 'ஆவிற்கு' என்றும், பொருள்கொடுத்துக் கொள்ளவேண்டாதஎண்மைத்து ஆகலின், 'நீர்' என்றும், இரக்கின்றானுக்கு இளிவு அச்சொல்லளவே யாக லின் 'நாவிற்கு' என்றும், அ.துதான் எல்லா இளிவினும் மேற் படுதலின் 'இளிவந்ததில்' என்றும் கூறினார்.

இதனான், அறனும் முயன்று செய்வதல்லது இரந்து செய் யற்க வென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) சிறந்த அறச்செயலையும் இரந்து செய்தல் கூடா தென்பதாம். இறக்கும் நிலைமைத்து-சாகின்ற நிலைமையை யடைந் தது. அறன்நோக்கி - (இந்தஆவிற்குநீர்வார்க்குமாறுசெய்தால் பசுவின் உயிரைக்காத்த அறப்பயனுண்டாமென்று நினைத்து, ஆவையெடுத்தது, அதனைக் காத்தல் பேரறமாதலால். பொருள் கொடுத்துக்கொள்ளவேண்டாத - பணங்கொடுத்து வாங்க வேண்டியதாகாத, எண்மைத்து - எளியதாகக் கிடைக்கக்கூடியது. இரக்கின்றானுக்கு இளிவு அச்சொல்லளவேயாகலின் - ஆவிற்கு நீரிரப்பவன் இளிவுபடச் சொல்லவேண்டுவது, 'ஆவிற்கு நீர்கொடு' என்ற அளவே யாதலால்; வேறு இல்லை என்க. அதுதான் - அச்சொல்லே. முயன்று - முயற்சியினாற் பொருளைத் தேடி. "தளர்வொடு மெலிந்தும் வையந் தனிக்குடை நிழற்றும் பைம் பொற், கிளரொளிப்பூணான் வீமன் பாவையைக் கேட்டல்செய்யான், அளியென வுயிரை யுண்மையறத்தினை யறவிட்டாலும் இளிவென வெண்ணி மானம்பூண்டவ ரிரப்பர் கொல்லோ" என்ற நைடதமும் ஈங்குக் காண்க. (௬)

௧0௬௭. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பின்
கரப்பா ரிரவன்மி னென்று.

பரி:—இரப்பாரை எல்லாம்—, இரப்பன் -(யான்) இரவா நின்றேன்: (யாதுசொல்லி யெனின்), 'இரப்பின் - (நுமக்கு) இரக்கவேண்டுமாயின், கரப்பார்- (தமக்கு உள்ளது) கரப்பாரை, இரவன்மின்-இரவாதொழிமின்',என்று-என்று சொல்லி;(எ-று.)

இரண்டாவது விகாரத்தால் தொக்கது. இவ்விளிவந்த செயலான் ஊட்டியவழியும் உடம்பு நில்லா தாகலின், இது வேண்டா என்பது தோன்ற, 'இரப்பன்' என்றார்.

இதனான், மானந்தீர வரும் இரவு விலக்கப்பட்டது.

(கு - ரை.) மானந் தீர வரும் இரவைச் செய்யற்க என்பதாம். இரண்டாவது விகாரத்தால் தொக்கது, கரப்பாரென்பதன்பின் ஆகும். இவ்விளிவந்த செயலான் - இழிவுபொருந்திய இந்த இரத்தல் தொழிலால், ஊட்டிய வழியும் - (இவ்வுடலுக்கு) உண வைத் தேடிக்கொடுத்தாலும். இது - இரவு. "மானவருங்கல நீக்கி யிரவென னும், ஈனவிளிவினன் வாழ்வேன்பன்—. ஈனத்தால், ஊட்டியக்கண்ணும் முறுதிசேர்ந்திவ்விடம்பு, நீட்டித்து நிற்கு மெனின்" என்ற நாலடி இங்குக் காணத்தக்கது. (எ)

௧0௬அ. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

பரி:—(இவ்வறுமையென்னுங் கடலை இதனாற் கடத்து மென்று கருதி ஒருவனேறிய), இரவு என்னும்—, ஏமாப்பு இல்- சேமமற்ற, தோணி—,—(அதன்கண் ஓடுங்கால்), கரவு என்னும்- கரத்தலென்னும், பார் தாக்க - வன்னிலத்தோடு தாக்குமாயின், பக்குவிடும் - பிளந்துபோம்; (எ - று.)

முயற்சியாற் கடப்பதனை இரவாற் கடக்கலுற்றான் அதன் கரை காணாமையின், 'ஏமாப்பிறோணி' என்றார். ஏமாப்பின்மை, தோணிமேலேற்றப்பட்டது. அது கடத்தற்கு ஏற்றது அன்மை யானும், நிலமறியாது செலுத்தியவழி உடைதலானும், அதன் கணேறற்க என்பதாம். இஃது - அவயவவுருவகம்.

(கு - ரை.) இரவென்னும் சேமமற்ற தோணி கரவினால் தகர்ந்திடுமாதலால், இரவினால் வறுமைக்கடலைக் கடக்கலாகா தென்பதாம், இதனால் - இரவினால். இரவைத் தோணிஎன்றதற்கு ஏற்ப, இரவாளனை அத்தோணியின்மேலேறியவனாகக் கொண்டார். அதன்கண் - வறுமையென்னுங் கடலில். வன்னிலம்-பாறையான இடம். முயற்சியாற் கடப்பதனை - முயற்சியினாற் கடந்திடவேண் டிய வறுமையென்ற கடலை. அதன்-அந்த வறுமைக்கடலின். இர னால் வறுமைக்கடலைக் கடக்கமுடியாதென்ற காரணத்தினால், இரவென்னுமேமாப்பில் தோணி என்றார். ஏமாப்பின்மை இரவுக்கு அடைமொழியாகவேண்டியதாக இருக்க, 'ஏமாப்பி தோணி' என்று தோணிக்கு அடைமொழியாகக் கூறியதனால், ஏமாப் பின்மை தோணிமேலேற்றப்பட்டதென்றார். அது கடத்தற்கு ஏற்றது அன்மையான் உம்-அந்த இரவு வறுமையைக் கடத்தற்கு உரியதல்லாமையாலும். நிலம் - செல்லும் இடம். கரத்தலை யுடையாரிடத்து இரத்தல் வறுமையைப் போக்க உதவாமையால், நிலமறியாது செலுத்தியவழி உடைதலான் என்றது. அதன்கண் ஏறற்க - வறுமையை இரத்தலாற் கடந்துவிடலாமென்று (அத் தொழிலைக் கொள்ளற்க என்றபடி. அவயவவுருவகமாவது - அவய வியை உருவகப்படுத்தாது அவயவத்தைமாத்திரம் உருவகஞ் செய்வது. முக்கியமான வறுமையைக் க லென்று உருவகஞ்செய் யாது, இரவு கரவுகளைத் தோணி பார் என்று உருவகஞ்செய்தமை யால், இது - அவயவவுருவகம். பார் - வன்னிலம். (அ)

கoசுகூ. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்.

பரி:—(உடையார்முன் இல்லார்சென்று), இரவு - இரந்து நிற்றலின் கொடுமையை, உள்ள - நினைந்தால், உள்ளம் - (எம்) உள்ளம், உருகும் - கரைந்துருகாநிற்கும்: (இனி அந்நிலையைக் கண்டுவைத்தவர்), கரவு - இல்லையென்றலின் கொடுமையை, உள்ள - நினைந்தால், உள்ளதூஉம் - அவ்வுருகுமளவு தானும், இன்றி—, கெடும் - பொன்றிவிடும்; (எ - று.)

"இரவினை, உள்ளுங்காலுள்ள முருகுமெவன்கொலோ, கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு" என்றார் பிறரும். இரவி னும் கரவு கொடிதென்பதாம். இதற்குப் பிறரெல்லாம் இரக் கின்றவருள்ளம் உருகுமென்று உரைத்தார்.

(கு - ரை.) வறியவர் செல்வரிடத்துச் சென்று நிற்கும் நிலையைக் கருதும்போதே நமக்குஉள்ளம் உருகுகின்றது; அச்செல்வர் தம்மிடத்துள்ள பொருளைக் கரத்தலை நினைக்கும்போது நம்மனம் உருகும் நிலையுமின்றி அழிவதாகும்: ஆதலால், இவ்வாறுன இரத்தல் தொழிலைச் செய்யற்கஎன்பதாம். இனி,கரவுள்ள உள்ளதூஉம் இன்றிக் கெடும் என்பதற்கு—கரத்தலையுள்ள, இரப்பவரின் உள்ளம் உருகுதமின்றிப் போன்றிவிடுமென்றுமாம்.உடையார்-பொருளுள்ளவர், இல்லார் - வறியவர். "உடையார்முனில்லார்போலேக் கற்றும்" என்பது, திருக்குறள், கல்வி,5. அந்நிலையை - இரப்பாரிருக்கின்ற நிலைமையை, கண்டுவைத்தவர் - செல்வர். அச்செல்வர் இல்லையென்று சொல்லும் கொடுமையை நினைத்தால் எம் மனம் அழிந்தேவிடுமென்றபடி. பொன்றுதல் - அழிதல். "இரவினே" என்று தொடங்கும் மேற்கோள், நாலடி, இரவச்சம், 5-இல் உள்ளது. இதன் பொருள்:— இரவினே - யாசித்தல் தொழிலை, உள்ளுங்கால் - நினைக்குமிடத்து, உள்ளம் - மனம், உருகும்—; கொள்ளுங்கால் - (பிறரிடத்து ஒன்றனைப்) பெறும்போது, கொள்வார் குறிப்பு - பெற்றுக்கொள்ளும் யாசகரின் எண்ணம், என்கொலோ - எவ்வாறு இருக்குமோ? இரத்தலை நினைக்கும்போதே நமது உள்ளம் உருகுகின்றதே! இரந்து பெறும் யாசகர் மனம் எவ்வாறுஇருக்குமோ என்றபடி. இனி என்கொலோ கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு என்பதற்கு - பிறர் வருந்திப் பெற்ற பொருளைத் தாம் ஒருமுயற்சியுமின்றி யாசகத்தாற் பெறுபவரது எண்ணம் என்னவோ? அந்த எண்ணம் இகழத்தக்கதேயென்றுமாம். இதற்கு-இரவுள்ள உள்ளமுருகும்என்பதற்கு. இரக்கின்றவருள்ளமுருகும் என்று பிறரெல்லாங்கூறினர்; அப்படி உருகுபவனுயிருந்தால் அன்னுன் இரத்தலை மேற்கொள்ளமாட்டானுதலால், அப்பொருள் சிறக்கு மாறில்லை யென்க. (௯)

௧0௭0. **கரப்பவர்க்கி யாங்கொளிக்குங் கொல்லோ யிரப்பவர்**
**சொல்லாடப் போஒ முயிர்.**

பரி:—கரப்பார்—, சொல்ஆட - (இல்லையென்று) சொல்லாடிய துணையானே, இரப்பவர் - இரப்பார்க்கு, உயிர் போம் - உயிர் போகாநின்றது: கரப்பவர்க்கு - (இனிச்சொல்லாடுகின்ற) அவர் தமக்கு, (உயிர் பின்னும் நிற்றலால் அப்பொழுது), யாங்கு- எப்புரையுள், ஒளிக்கும் கொல்ஓ-புக்கொளித்து நிற்கும்;? (எ-று.)

உயிர்போகலாவது - இனி யாம் என்செய்தும் என்று ஏங்கிச் செயலற்று நிற்றல். "அந்நிலையே, மாயானோ மாற்றிவிடின்" என்றார் பிறரும். கேட்டாரைக் கொல்லவற்றுய சொல், சொல்வாரைக் கோறல் சொல்லவேண்டாவாயினும், அது காண்கின்றிலம்: இஃது என்னே என்பதாம். வறுமையுற்றுழி மறையாது இரக்கப்படுவாராய கேளிர்கட்கும் அதனைச் சொல்லாட உயிர் போம்: ஆனபின், மறைக்கப்படுவாராய பிறர்க்குச் சொல்லாடியக்கால், போகாது எங்கே ஒளித்து நிற்கும்? இரண்டானும் போமே யன்றோ என இரவஞ்சினான் கூற்றாக்கி உரைப்பாருமுளர்.

இவை மூன்று பாட்டானும் அவ்விரவின் குற்றமும் கரவின் குற்றமும் ஒருங்கு கூறப்பட்டன.

(கு - ரை.) கேட்பாரைக் கொல்லும் வலிமைவாய்ந்தசொல் அது சொல்வாரைக் கொல்லக் காண்கின்றிலோம் : ஈது என்னே? என்றுவியந்தவாறு. சொல்லாடியதுணையானே - பேசிய மாத்திரத்தானே. அப்பொழுது - கரப்பார் தம்மிடத்து இல்லையென்று பேசும்போது. எப்புரையுள் - எந்த உள்ளிருக்குந்தொளையில். உயிர்போகலாவதுஎன்பதற்கு முன்'இரப்பார்க்கு' என்றுவருவிக்க. பிறரிடத்து இரக்கும்போது இரப்போர்க்கு மரணவேதனைபோன்ற வருத்தம் விளையுமென்றவாறு. என்செய்தும் - (பிழைக்க) என்ன உபாயஞ்செய்வோம்? "அந்நிலையே" என்ற மேற்கோள்—நாலடி, இரவச்சம் 8 - ஆம் பாட்டிலுள்ளது; இதன் பொருள் :— மாற்றிவிடின் - (இரப்பவன் 'எனக்கு ஈவாய்' என்று கேட்கும்போது செல்வன் தன்னிடமுள்ளதைக் கரந்து இல்லை என்று) மறுத்துவிட்டானாயின், அ நிலை - அப்போதே, (இரப்பாளன்), மாயானோ-மரணவேதனையடையானோ? [மரணவேதனையடைவானே! என்று இரங்கியவாறு.] கேட்டாரை-இல்லையென்ற சொல்லைக்கேட்ட இரப்பாளரை. கொல்லவற்றுஆய - கொல்லும் வல்லமையுள்ளதாகிய. கோறல் - கொல்வது. அது - சொல்வாரைக் கொல்வதை. இஃது என்னோ - இது என்ன வியப்போ! வறுமையுற்றுழி - தரித்திரப்பட்டபோது. இந்த முதலுரையை, இரப்பானொருவனது பரிதாபநிலையைக் கண்டோன் கூற்றாகக் கொள்க. இனி, இரவஞ்சினான் கூற்றாக [சொல்லாக] வேறோருரை வருமாறு :— (இரத்தற்கு உரிய சுற்றத்தார்க்கும்), இரப்பவர் - இரப்போர், சொல்ஆட - (தம் வறுமையை மறையாமற்) சொல்ல, உயிர்போம்-: (அப்படியிருக்க), கரப்பவர்க்கு-(வறுமையைச் சொல்லாமல்) மறைத்தற்கு உரியவராகிய பிறரிடத்தில், சொல்லாட - (தமது வறுமையைச்) சொல்லுமாறு நேர்ந்தால், உயிர் - (அங்ஙனம் தம் வறுமையைச் சொல்லுகின்ற இரப்பவரின்) உயிர், யாங்கு ஒளிக்கும் கொல் - (சொல்லாடியக்காற் போகாது) எங்கே ஒளிக்குமோ? [சுற்றத்தார் மற்றையார் என்ற இருவரிடத்தும் சொல்லாட உயிர்போயேதீரும் என்பது]. (௧0)

## ௧0அ - ஆம் அதிகாரம்—கயமை.

பரி :—அஃதாவது - மேல் அரசியலுள்ளும் அங்கவியலுள்ளும் சிறப்புவகையாற் கூறப்பட்ட குணங்களுள் ஏற்புடையன குறிப்பினால் யாவர்க்கும் எய்த வைத்தமையின், ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும், ஈண்டு ஒழிபியலுள் வெளிப்படக் கூறியனவுமாய குணங்கள் யாவும் இலராய கீழோரது தன்மை. அதனால், இஃது எல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) ஏற்புடையன - தக்கவை. குறிப்பினால் யாவர்க்கும்எய்த வைத்தமையின் - எல்லார்க்கும் வேண்டியன என்று குறிப்பாக அறியும்படி கூறியிருத்தலால். ஈண்டு ஒழிபியலுள் -

இந்நூலில் ஒழிபியலில். ஒழிபியலுள் கூறியவை, குடிமை முதல் கயமையீறனவை. இவற்றுள் கொள்ளவேண்டுவன தள்ளவேண்டியன என்ற இரண்டும் உள்ளன. உதாரணமாக, குடிமை கொள்ள வேண்டியது, நல்குரவு தள்ளவேண்டுவது எனக்காண்க. கயமை- இருக்கவேண்டிய நற்குணமொன்றும் இல்லாமையாற் கீழ்மைப் பட்டோரின் தன்மை. எல்லாவற்றிற்கும் - ஒழிபியலிலுள்ள அதிகாரங்கள் யாவற்றிற்கும்.

௧௦எ௧. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
ஒப்பாரி யாங் கண்ட தில்.

பரி :—மக்கள் ஏ போல்வர் - (வடிவான் முழுதும்) மக்களை யொப்பர், கயவர்—; அவர் அன்ன ஒப்பாரி - அவர் மக்களை யொத்தாற் போன்ற ஒப்பு, (வேறுஇரண்டுசாதிக்கண்), யாம்—, கண்டது இல் - கண்டதில்லை ; (எ - று.)

முழுது மொத்தல், தேற்றேகாரத்தாற் பெற்றும். அவரென்றது - அவர் மாட்டுளதாய ஒப்புமையை. மக்கட் சாதிக்கும் கயச்சாதிக்கும் வடிவு ஒத்தலின், குணங்களது உண்மையின்மைக ளானல்லது வேற்றுமை அறியப்படா தென்பதாம்.

இதனன், கயவரது குற்றமிகுதி கூறப்பட்டது.

(கு - ரை.) மக்கட்சாதி கயச்சாதி என்ற இரண்டு சாதிக்கணுள்ள ஒற்றுமைபோல, வேறு எந்த இரண்டு சாதிக்கண்ணும் ஒப்புமை கண்டோமில்லை யென்பதாம். கயவர் - கீழோர். மக்களே போல்வர் என்ற இடத்திலுள்ளது, தேற்றேகாரம். தேற்றேகாரம்- துணிவுப் பொருளுள்ள 'ஏ' என்னும் இடைச்சொல். அவர் என்றது - அவரிடத்திலுள்ள ஒப்புமை என்ற பொருளில் வந்த தென்க். அங்ஙனங் கொள்ளாவிடின், ஒப்பாரி என்பதனேடு இயையாது. ஒப்பாரி - ஒப்பு; ஒப்புஎன்றசொல் ஆர் இ என்ற சாரியைகளைப்பெற்றது என்னலாம். அவரென்றது, கயவரை. முழுதும் - சிறிதிடமும் மிச்சமில்லாமல் என்றபடி. வடிவால் மக்களும் கயவரும் ஒப்பரென்றதனல், அவர்கள் குணங்களால் தம்முள் ஒவ்வா ரென்பது பெறப்படுமாறு அறிக. (க)

௧௦எ௨. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

பரி :—நன்று - (தமக்கு) உறுதியாவன, அறிவாரின்—, கயவர் - (அவையறியாத) கீழ்மக்கள், திரு உடையர் - நன்மையுடையர் : (அவர்போல அவைகாரணமாக), நெஞ்சத்து - (தம்) நெஞ்சத்தின்கண், அவலம் இலர்-கவலையிலர், (ஆகலான்); (எ-று.)

நன்றென்பது - சாதியொருமை. உறுதிகளாவன - இம்மை மறுமை வீடுகட்கு உரியவாய புகழ் அற ஞானங்கள். இவற்றை யறிவார், இவைசெய்யா நின்றே மிகச் செயப்பெறுகின்றிலே மென்றும், செய்கின்ற இவைதமக்கு இடையூறு வருங்

கொல் என்றும், இவற்றின் மறுதலையாய பழி பாவம் அறி யாமை என்பனவற்றுள் யாது விளையுமோ என்றும், இவ்வாற்றாற் கவலையெய்துவர்: கயவர், அப்புகழ் முதலிய வொழித்துப் பழி முதலிய செய்யாநின்றும் யாதுங்கவலை யுடைய ரல்லராகலான், 'திருவுடையர்' எனக் குறிப்பால் இகழ்ந்தவாறு.

இதனான், பழி *முதலியவற்றை யஞ்சாரென்பது கூறப் பட்டது.

(கு - ரை.) கீழ்மக்கள் நன்மையைத்தருஞ் செயல்களைச் செய்வ தில் எண்ணமில்லாமல் பழிபாவங்களைத் தருஞ் செயல்களை அஞ் சாது செய்வரென்பதாம். அவர் - நன்றறிவார். அவை - தமக்கு உறுதியாவன. நன்று என்றது - உறுதியான புகழ் அறம் ஞானங் கள் என்ற பன்மைப் பொருளைத் தந்ததனால், சாதி யொருமை யாயிற்று. இம்மைக்கு உரியது புகழ் என்றும், மறுமைக்கு உரி யது அறமென்றும், வீட்டிற்கு [மோட்ச லோகத்திற்கு] உரியது ஞானமென்றும் அறிக. "ஞாநாந் மோக்ஷஃ" என்றது, இங்குக் காணத்தக்கது. இவற்றை - புகழறஞானங்களை. இவை செய்யா நின்றே-புகழற ஞானங்களைப்பெற முயற்சிசெய்து கொண்டிருந்தே. புகழுக்கு மறுதலை, பழி: அறத்துக்கு மறுதலை, பாவம்: ஞானத் துக்கு மறுதலை, அறியாமை. இவ்வாற்றால் - இவ்வாறு கருதும் வகையால். கயவரைத் திருவுடையரென்று புகழ்ந்தாற்போல இகழ்ந்தஇது - **வஞ்சப்புகழ்ச்சியணி** யெனப்படும். கயவர் திரு வுடைய ரென்பதை, 'நெஞ்சத்தவலமிலர்' என்ற பின்வாக்கியம் சமர்த்தித்து நிற்பது - **தொடர்நிலைச்செய்யுட் குறியணியாம்.** அஞ்சா ரென்பதற்கு, கயவரென்ற எழுவாய் வருவிக்க. (௨)

௧0௭௩. **தேவ ரனையர் கயவ ரவருந்தாம்**
**மேவன செய்தொழுக லான்.**

பரி:—தேவர் அனையர் கயவர் - தேவரும் கயவரும் ஒரு தன்மையர்: (அஃது யாதினானெனின்), (தேவரைப்போன்று தம்மை நியமிப்பாரின்றி), அவர்உம்-கயவரும், தாம்—, மேவன- விரும்புவனவற்றை, செய்து ஒழுகலான்—; (எ - று.)

உயர்ச்சியும் இழிவுமாகிய †தம் காரண வேறுபாடு குறிப் பால் தோன்ற நின்றமையின், இது, புகழ்வார்போன்று பழித்த வாறாயிற்று.

இதனால், விலக்கற்பாடின்றி வேண்டிய செய்வரென்பது, கூறப்பட்டது.

(கு - ரை.) நன்மை தீமைகளை யாராயாமல் கயவர் தாம் விரும் பியபடியே செய்வரென்பதாம். நியமிப்பார் - ஒருவரையறைக்கு உட்பட்டிருக்குமாறு கட்டளையிடுபவர். தேவர் உயர்ந்தோராத லால், அவரைக் கட்டளையிடுபவரில்லை: கயவரோ அடங்காப்பிடாரி

---

* பி - ம்: முதலியவற்றிற்கு † அதன் காரண வேறுபாடு.

யாய் இழிந்தோராதலால், அவரையும் நியமிப்பாரில்லை. இங்ஙன் நியமிப்பாரில்லாமை இருவர்க்கும் ஒத்திருப்பினும், தேவர்க்கு நியமிப்பாரின்மை அவருடைய உயர்ச்சியாலும், கயவர்க்கு நியமிப்பாரின்மை அவருடைய இழிவினுலும் ஆகியன என்பது குறிப்பாக விளங்குவது காண்க. இங்கு 'தேவரனையர் கயவர்' என்று புகழ்வார்போன்று குறிப்பாற் பழித்தவாறு காண்க. இதுவும் - **வஞ்சப் புகழ்ச்சியணியே.** விலக்கற்பாடு - தவிர்க்கப்படுதல். மேவன— மேவுவன : விரும்பியவை : பலவின்பால் வினையாலணையும் பெயர்.

௧0௭௪. **அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்**
**மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.**

பரி :—கீழ்-கீழாயினுன், அகம் பட்டி ஆவாரை - (தன்னிற்) சுருங்கிய பட்டியாயொழுகுவாரை, காணின் - கண்டானுயின், (அவ்வொழுக்கத்தின்கண்), அவரின் மிகப்பட்டு-அவரின் (தான்) மேம்பட்டு, செம்மாக்கும் - (அதனுல் தன்மிகுதிகாட்டி) இறுமாக்கும் ; (எ - று.)

அகப்பட்டி - அகமாகிய பட்டி, பட்டிபோன்று வேண்டிய வாறே யொழுகலின், 'பட்டி' என்றுர் : "நோதக்க செய்யுஞ் சிறுபட்டி" என்றுர் பிறரும்,

இதனுன், அவர் மேம்பாடு கூறப்பட்டது.

(கு - ரை.) கீழோன் தன்விருப்பின்படி தகுதியில் செயலைச் செய்வதில் தன்னினும் குறைந்தாரைக் காணும்போது தான் அவரினும் விஞ்சியிருப்பது குறித்துச் செருக்குக் கொள்வனென்பதாம். அகப்பட்டி - (தனக்கு) உட்பட்டதாகிய, அதாவது தன்னினும் குறைந்த பட்டி ; பட்டி-தன் விருப்பின்படியே அடக்கமின்றித் திரிவது. தான் வேண்டியவாறே திரியும் பிராணியைப் பட்டியென்று வழங்குவதற்கு மேற்கோள் "நோதக்க செய்யுஞ் சிறு பட்டி" என்பது; இம்மேற்கோள், கலித்தொகையில் குறிஞ்சிக்கலி 15 - இல் உள்ளது; இதன் பொருள் :— சிறு பட்டி - சிறுமையையுடைய காவலில்லாதான், நோதக்க செய்யும் - நோவத்தக்க தொழில்களைச் செய்வான் என்பது. அவர் - கயவர். கயவர் மேம்படுவது, அயோக்கியத்தனத்திலேயே யென்க. தன்னைக்காட்டிலும் அயோக்கியத்தனத்திற் சுருங்கியவரைக் காணின், கயவன் தான் அயோக்கியத்தனத்தில் அவரினும் மிகுதிப்பட்டவன் என்று கருதி இறுமாப்படைவன் என்றவிடத்து 'Superiority-Complex' என்று சிலர் உரை நிகழ்த்துவது என்ன பொருத்தமுடைத்தென விளங்கவில்லை. (௪)

௧0௭௫. **அச்சமே கீழ்கள தாசார மெச்சம்**
**அவாவுண்டே லுண்டாஞ் சிறிது.**

பரி :—கீழ்களது - கயவரதாய, ஆசாரம்—, (கண்டது உண்டாயின்), (அதற்குக் காரணம்), அச்சம் ஏ-(அரசனுன் ஏதம் வருமென்று அஞ்சும்) அச்சமே : எச்சம்-(அஃது) ஒழிந்தால், அவா-(தம்மால்) அவாவப்படும்பொருள், உண்டுஎல்-(அதனுல்) உண்டாமாயின், சிறிது உண்டு ஆம்-சிறிதுண்டாம் ; (எ - று.)

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், அவாவப் படுவதனை 'அவா' என்றும் கூறினர். எச்சத்தின்கணென்னு மேழாவது, இறுதிக்கட் டொக்கது. பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு, இவ்விரண்டானு மன்றிஇயல்பாக உண்டாகாதென்பதாம்.

வேண்டிய செய்தலே இயல்பு, ஆசாரஞ்செய்தல் இயல் பன்று என்பது, இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) கீழோர் அரசனிடத்து அச்சத்தினாலோ, தாம் விரும்பும் பொருளைப் பெறலாமென்ற எண்ணத்தினாலோ ஆசாரத்தை மேற்கொள்வதன்றி, காரணமின்றி இயல்பாக ஆசாரத்தை மேற்கொள்ளாரென்பதாம். ஆசாரம் - நல்லொழுக்கம். ஏதம் - துன்பம். ஆசாரத்திற்குக் காரணம் அச்சமென்னுது ஆசாரத்தையே 'அச்சம்' என்று ஒற்றுமைப்படுத்துக் கூறியது - காரணம் காரியமாகிய உபசாரவழக்கு. அவாவப்படுபொருளை அவாஎனத் தொழிற்பெயராகக் கூறியது - தொழிலாகு பெயராம். எச்சம் என்பது - (அச்சம்) ஒழிந்தநிலையில் என்று பொருள் படுதலால், 'எச்சத்தின்கண்' என்று இருக்கவேண்டிய ஏழனுருபு தொக்கதென்றார். இயல்பாக உண்டாகாது என்ற இடத்து 'கயவர்க்கு ஆசாரம்' என்று வருவித்து உரைக்க. வேண்டிய செய்தலே - (ஒருகட்டுக்கு அடங்காமல் தாம்) விரும்பியவற்றைச் செய்வதே. (௫)

௧௦எசு. **அறைபறை யன்னர் கயவர் தாம்கேட்ட**
**மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.**

**பரி :**—தாம் கேட்ட—, மறை - மறைகளை, உய்த்து-இடந்தொறும் தாங்கிக்கொண்டுசென்று, பிறர்க்கு—, உரைக்கலான்- சொல்லுதலால், கயவர்—, அறை - அறையப்படும், பறை - பறையினை, அன்னர் - ஒப்பர் : (எ - று.)

மறை - வெளிப்படிற் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். பிறர் - அம்மறைத்தற்கு உரியார். உய்த்தென்றார், அவர்க்குஅது பெரும்பாரம் ஆதல் நோக்கி, பறை - ஒருவன் கையால் தன்னைஅறிவித்ததொன்றனை இடந்தொறும் கொண்டுசென்று யாவரையும் அறிவிக்குமாகலின், இது தொழிலுவமம்.

இதனால், அவரது செறிவின்மை கூறப்பட்டது.

(கு - ரை.) கயவர் தாம் கேட்ட இரகசியங்களைப் பிரரறியப் பறையறைவர் என்பதாம். மறைகளை - இரகசியங்களை. பறை - கொட்டப்படுந் தோற்கருவி. உய்த்து என்பதற்கு - தாங்கிக் கொண்டு என்று பொருளாதலால், அந்த மறை அந்தக் கயவர்க்குப் பெரும்பாரமாதல் பெறப்படும். கையால் இடந் தோறும் கொண்டுசென்று என இயையும். பறை யென்பது கையால் இடந்தோறும் சுமந்துகொண்டு சென்று

ஒருவன் சொல்லியவிஷயத்தை யாவர்க்கும் அறிவிப்பதுபோன்று, கீழ்மக்கள் தாம் கேட்ட இரகசியத்தை யுட்கொண்டு சென்று பிற ருக்குச் சொல்லுவ ரென்றதனல் தொழிலுவமமாயிற்று. செறி வின்மை - அடக்கமின்மை. (௬)

௧0௭௭. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

பரி:—கயவர்—, கொடிறு உடைக்கும் - (தம்) கதுப்பினை நெரிப்பதாக, கூன் கையர் அல்லாதவர்க்கு - வளைந்த கையினை யுடையவ ரல்லாதார்க்கு,—ஈர்ங் கை—(தாம்) உண்டு பூசிய கையை, விதிரார் - (தெறித்தல்வேண்டு மென்று இரந்தாலும்) தெறியார்; (எ - று.)

வளைந்தகை-முறுக்கியகை. மெலிவார்க்கு யாதும் கொடார்: நலிவார்க்கு எல்லாம் கொடுப்பரென்பதாம்.

(கு - ரை.) கீழோர் இரப்போர்க்கு யாதும் கொடார்: தம்மை வருத்துவோர்க்கு எல்லாம் கொடுப்பரென்பதாம். கதுப்பினை - கன்னத்தை. ஈர்ங்கை யென்பதன் பதப்பொருள் - ஈரமுள்ள கை யென்பது; இங்கு உண்ட உணவின் ஈரம் பூசப்பெற்றுள்ள கை என்ற பொருளது என்பார் 'தாம் உண்டுபூசிய கையை' என்று விவரித்தார்; "எச்சிற் கையாற் காக்கையையும் ஓட்டான்" என்று உலோபியைப்பற்றிக் கூறுவதும் இங்கு அறியத்தக்கது. "தளிர் மேலே நிற்பினும் தட்டாமற் செல்லா, உளி நீரர்மாதோ கயவர் - அளிநீரார்க்கு, என்னனுஞ் செய்யா ரெனைத்தானுஞ் செய்பவே, இன்னுங்கு செய்வார்ப்பெறின்", "பெற்றூர் பிறந்தார் பெரு நாட்டார் பேருலகில், உற்ருருகந்தாரெனவேண்டார் - மற்ருேர், இரணங்கொடுத்தா லிடுவரிடாரே, சரணங் கொடுத்தாலும் தாம்," "பாடுவோர்க்கீயாரே பல்லுதிரத்தாடையிலே, போடுவார்க்கீவர் பொருள்" என்பன, இங்குக் காணத்தக்கன. (எ)

௧0௭௮. சொல்லப் பயன்படுவர் சான்ருேர் கரும்புபோல்
கொல்லப் பயன்படுங் கீழ்.

பரி:—சொல்ல - (மெலியார் சென்று தம் குறையைச்) சொல்லிய, துணையானே, பயன் படுவர் - (இரங்கிப்) பயன்படு வர், சான்ருேர் - மேலாயினர்: கீழ் - மற்றைக் கீழாயினர், கரும்புபோல் - கரும்புபோல, கொல்ல - (வலியார்) நைய நறுக் கியவழி, பயன்படும் - பயன்படுவர்; (எ - று.)

பயன்படுதல் - உள்ளது கொடுத்தல். கீழாயினரது இழிவுதோன்ற, மேலாயினரையும் உடன் கூறினர்.

இவை இரண்டு பாட்டானும் அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) கீழாயினோர் தம்மை வலியார் நெருக்கும்போது தான் உள்ளது கொடுப்பரென்பதாம். நைய - நைந்துபோகும்படி,

வலியார் நெருக்கிய வழி என இயையும். உள்ளது கொடுத்தல் - தம்மிடத்துள்ள பொருளைக் கொடுத்தல். இது, கயமையென்னும் அதிகாரமாதலால், அதிகாரத்திற்கு ஏற்ப,கயவர் குணமே இதிற் கூறத்தகுவதன்றி, ஏனைமேலாயினர் குணம் கூறத்தகுவது அன்றே என்று எழும் வினாவையுட்கொண்டு, கீழாயினரது இழிவு தோன்ற, மேலாயினரையும் உடன்கூறினா ரென்றார்; மேலாயினருடைய தன்மையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது கீழாயினரின் இழிதன்மை நன்குபுலனாதல் காண்க. அவர் - கீழாயினர். " துர்ச்சனரைப் பொன்னைத் துடியைத் துரகதத்தை, அச்சமற முன்னிற்கு மாயிழையை - நச்சரவைக், கண்டித்தீளள்ளைக்கரும்பையிளநீரைத், தண்டித்தார்க் கன்றோ சயம்'' என்ற பாடல் இங்குக் காணத்தக்கது. (அ)

கoஎக. உடுப்பதூ முண்பதூங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

பரி :—உடுப்பதூஉம் - (பிறர் செல்வத்தால் பட்டும் துகிலும்) உடுத்தலையும், உண்பதூஉம் - (பாலொடு அடிசில்) உண்டலையும், கீழ் - கீழாயினான், காணின் - காணுமாயின், (அவற்றைப் பொறாது), பிறர்மேல் - அவர்மாட்டு, வடு காண - வடு இல்லையாகவும் உண்டாக்க, வற்று ஆகும்-வல்லனாம்; (எ-று.)

உடுப்பது உண்பது என்பன—ஈண்டு அவ்வத்தொழின் மேல் நின்றன. அவற்றால், பூண்டல் ஊர்தல் முதலிய பிற தொழில்களும் கொள்ளப்படும். அவற்றைக்கண்ட துணையானே பொறாமையெய்தலின் காணின் என்றும், கேட்டார் இது கூடுமென்று இயையப் படைத்தல் அரிது ஆகலின் வற்றாகும் என்றும் கூறினார்.

இதனான், பிறர்செல்வம் பொறாமை கூறப்பட்டது.

(கு - ரை.) பிறர் இனிது உண்டு உடுத்தலைக் கயவன் காணின், பொறாமையினால் கேட்டார் நம்புமாறு செல்வரான அப் பிறர்மீது சில குற்றங்களை அக்கயவன் ஏறிட்டுச் சொல்லவல்லனா மென்பதாம். உடுப்பதும் உண்பதும் என்று தனியே எடுத்து ப்ரஸ்தாவிக்கப் படுதலால், அதற்கு ஏற்ப, பட்டுந் துகிலுமுடுத்தலையும், பாலொடு அடிசிலுண்டலையும் காட்டு மெனக்கொண்டு உரைக்கின்றார். அவற்றை - உடுத்தல் உண்டல்களை. அவர் மாட்டு - செல்வத்தால் பட்டுந்துகிலுமுடுத்துப் பாலொடடிசிலுண்ணுஞ் செல்வரிடத்து. வடு குற்றம். உடுப்பது உண்பது என்று செய்யுளில் வந்தவை-உடுக்கப்படும்ஆடை உண்ணப்படும்உணவுப் பொருள் என்று வினையாலணையும்பெயராகாமல், உடுத்தல் உண்ணுதல் எனத் தொழிற்பெயர்ப்பொருளனவா மென்பார், தொழின்மேனின்றன என்றார். உடுத்தல் உண்ணுதலைக் கூறியது - பூண்டல் முதலியவற்றிற்கும் உபலட்சணமாம். பூண்டல் - ஆபரணங்களை யணிதல். ஊர்தல் - குதிரை யானை தேர் என்ற

இவைகளின்மீது ஏறிச்செல்லுதல். அவற்றை - உடுத்தல் முத லியவற்றை. கண்ட துணையான் - பார்த்த மாத்திரத்தில். கேட் டார் இது கூடும் என்று இயைய - (கயவன் பொருளுமையினுற் கற் பித்துச் செல்வாரன பிறர்மீது வடுச்சொல்லைச் சொல்லுகையில், அச்சொல்லைக்) கேட்டவர் (அப்பிறரைப்பற்றிய) வடுச்சொல் அவர்க்கு ஏற்கும் என்று உடன்படுமாறு. வற்று - வல்லமை யுடையது: வன்மையென்ற பகுதியினடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. கீழ் - பண்பாகுபெயர்: கீழ் என்பதற்கு ஏற்ப, வற்று என்ற பயனிலை வந்தது. (௯)

௧௦௮௦. ஏற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

பரி :—கயவர்—,—ஒன்று - (தம்மை யாதானும்) ஒரு துன் பம், உற்றக்கால்—,—(அதுவே பற்றுக்கோடாக), விரைந்து—, —விற்றற்கு - (தம்மைப் பிறர்க்கு) விற்றற்கு, உரியர்—: (அது வன்றி), ஏற்றிற்கு-(வேறு) எத்தொழிற்கு, உரியர்—? (எ-று.)

உணவின்மையாக பிறிதாக ஒன்றுவந்து உற்ற துணையா னென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும், கொள்ளு கின்றார் தம்கயமையறிந்து வேண்டா என்றற்குமுன்னே விற்று நிற்றலின் 'விரைந்து' என்றும் கூறினார். ஒருதொழிற்கும் உரியரல்ல ரென்பது, குறிப்பெச்சம்.

இதனான், தாம் பிறர்க்கு அடிமையாய் நிற்ப ரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) கயவர் துன்பம்நேரின் ஒரு தொழிற்கும் உரிய ரல்லர்: தாம் பிறர்க்கு அடிமையாய் நிற்ப ரென்பதாம். விற்றற் குரியரென்பதனால், அடிமையாவரென்றுகூறியவாறு. அடிமை வழக்கம் திருவள்ளுவர்காலத்தி லிருந்தமை, இதனாற் பெறப்படும். உணவு இன்மை ஆக - உணவில்லாமையாலாவது. பிறிது ஆக - வேறு காரணத்தாலாவது. உற்றதுணையான் - நேரிட்டவளவால். கயமை - கீழ்மை. வேண்டா என்றற்குமுன்னே - விற்கப்படுகின்ற இவர் எமக்கு வேண்டா என்றுவாங்குபவர் சொல்வதற்குமுன்னே. ஒருகாரியத்துக்கும் கயவர் உதவாரென்பது, இங்குப்பெறப்படும் குறிப்பெச்சமாகிய பொருளாம். (௧௦)

ஒழிபியல் முற்றிற்று.

## பொருட்பால் முற்றிற்று.

———

ஸ்ரீ இராமலிங்கம் அச்சகம், 59-குளை ஐரோட், சென்னை.

# பொருட்பாலின் அரும்பதவகராதி முதலியன

[எண் - பாட்டெண்.]

## திருக்குறட் பொருட்பாலின் செய்யுண் முதற்குறிப்பகராதி

[ எண் - பக்கவெண் ]

---

# திருக்குறள் பொருட்பாலுக்குப் பிழைத்திருத்தம்

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 9 | சுலோகத்தில் | சுலோகத்தி |
| 7 | 35 | நகில் | நல்கி |
| 8 | 44 | கருவி | கருவி, |
| 15 | 6 | தத்தவ | தத்துவ |
| 16 | 26 | வெண்னெ | வெண்ணெ |
| 17 | 39 | நிளைப்பும் | நினைப்பும் |
| 22 | 15 | இனிமைமை | இனிமையை |
| 27 | 4 | ஆளை | ஆள் |
| 44 | 39 | யதங்கள் | பதங்கள் |
| 51 | 11 | என்ருா. | என்ருர். |
| 54 | 9 | முன்றை | மூன்றை |
| 57 | 2 | வதாகின்ற | தாகின்ற |
| | 42 | மையால். | மையால், |

58-ஆம் பக்கம் 20-ஆம் வரியில் கைகூடாது என்பதன்பின், ‘ஆகவே, அவன் செல்வம் கெடும்’ என்று சேர்க்க.

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 60 | 42 | ௬௬ | ௬௬௦ |
| 62 | 34 | யாரது. | யாரது, |
| | 36 | அறிந்து | அறிந்து, |
| 64 | 40 | என்றது | என்றது. |
| 66 | 7 | சூழ்வார் | சூழ்வார்க் |
| 68 | 29 | வெறு | வேறு |
| 69 | 5 | மன்னரை | மன்னன் |
| | 33 | யெயரெ | பெயரெ |
| | 34 | ரென்றலு | ரென்றலும் |
| | 35 | மறைய | மறை |
| 76 | 44 | தாயார் | தாயர் |
| 78 | 17 | பந்தக | பந்த |
| 79 | 7 | நான்கு | நன்கு |
| 91 | 14 | ஜய | ஐய |
| | 19 | ப்கைவ | பகை |
| | 42 | தவறி | தறிவ |
| 108 | 16 | போல- | போல |
| 120 | 14 | உரிமையுன் | உரிமையுள் |
| 137 | 37 | த்ததது | த்தது |
| 141 | 2 | செயல்: | செயல் |
| 145 | 38 | யாயினை | யினை |
| 146 | 12 | பிழைப்பி | பிழையி |
| 148 | 28 | ஒருமை | ஒருமைக் |
| 151 | 13 | மாட்டுஉம்: | மாட்டுஉம்- |
| | 33 | வல்ல— | வல்ல |
| 152 | 25 | ஞைக்கி | ஞேக்கி |
| 153 | 41 | என்பதற்கே | என்பதே |
| 155 | 43 | யாரை | யணி |
| 156 | 6 | அரசன் | அரசின் |
| 157 | 29 | நெஞ்சுட | நெஞ்சுசுட |
| 158 | 39 | ௩௩அ | ௩௬அ |
| 159 | 36 | கிலப் | சிலப் |
| 161 | 2 | கொளு | கொளுவு |
| 166 | 3 | நுண்ணு | நுண்ணி |
| 168 | 21 | ளுடைய | ளுடையரா |
| 169 | 33 | காவலன் | கா வலன் |
| 170 | 2 | கணம் | கணும் |
| | | ஆதனேடு | அதனேடு |
| | 5 | பார்ப்பநர் | பார்ப்பார் |
| 175 | 40 | கடுமொழி | கடுமொழி, |
| | 41 | தண்டம் | தண்டம், |
| 179 | 31 | பெரவறை | பொறை |
| 188 | 8 | கண் - | கண் |
| 195 | 6 | இரசிய | இரகசிய |
| 199 | 36 | தறுண் | தறுகண் |
| 214 | 16 | மரைந்த | மறைந்த |
| 220 | 24 | தெல்வ | தெய்வ |
| 227 | 20 | கூறுபவர் | கூறுவர் |
| 232 | 6 | மிறுதி | முறுநி |
| 233 | 4 | பிள்பு | பின்பு |
| 234 | 5 | திறப்பா. | திறப்பா |
| 238 | 5 | மேம்பட்ட | மேம்பட்ட, |
| | 18 | னுமாம். | னுமாம், |
| 240 | 16 | செய்தூ | செய்து |
| 241 | 21 | வாய்க் | வாய்ச் |
| 248 | 32 | சுல | சல |
| 249 | 9 | ஏமம் | ஏமம்- |
| 252 | 7 | வெட்டா | வொட்டா |
| 253 | 36 | வினைய | வினையை |
| | 38 | ஆகாவே, | ஆகவே, |
| 254 | 19 | உய்யக் | உய்க் |
| 257 | 9 | ஆலோக் | ஆலோசிக் |
| | 33 | தாமஞ் | தாமதஞ் |
| 258 | 8 | கல்விஆறு: | கல்வி, ஆறு |
| 260 | 41 | மொச்செய் | மொழிச்செய்யு |
| 263 | 27 | ற்ருமல் | ற்கூருமல் |
| 264 | 21 | தொழுதற | தொழுகற் |

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 264 | 35 | யுருபு, | யுருபு. |
| 268 | 24 | யகரச | யரச |
| 269 | 24 | செவ்வி | செவ்வி- |
| 270 | 13 | ஒழியாமை | ஒழியாமைப் |
| 276 | 18 | கணனன்றி | கணன்றி |
| 277 | 36 | பெயரால் | பெயர் |
| 279 | 6 | கொளப்பாட் | கொளப் |
| 288 | 24 | , செயவனெச்சய | -செயவெனெச்சம், |
|  | 26 | எழுவாய் | எழுவாயாக |
| 289 | 24 | இய்லை. | இல்லை. |
| 290 | 35 | அவன் | அவன்- |
| 293 | 9 | சுவை | அவை |
|  | 42 | தேறின் | தோரின் |
| 294 | 14 | புல்லறி | புல்லறிவு |
|  | 39 | சொல். | சொல், |
| 295 | 9 | முதுவருன் | முதுவருள் |
| 297 | 20 | தலருமல் | தவருமல் |
| 298 | 43 | கணத்தா | கணத்தார் |
| 299 | 23 | கல | சல |
| 303 | 23 | பயன- | பயன்- |
| 307 | 47 | மறுஞ் | மாறுஞ் |
| 309 | 18 | கூடிய | கூடி |
| 310 | 41 | விருப்ப | விரும்ப |
| 311 | 11 | தேஶய | தேஶ |
| 312 | 1 | உகஉ | ௩கஉ |
|  | 5 | யும் | யும். |
|  | 26 | ஞவா | ஞலா |
| 314 | 33 | சிறைப் | திறைப் |
|  | 35 | செய்யும் | செய்யும் உட்[பகையும் |
| 319 | 29 | ன்ரசன் | அரசன் |
| 321 | 28 | அரணின | அரணின் |
| 328 | 18 | படுத்தப் | படுத்துப் |
|  | 18 & 20 | முற்றுதெரிந்து | முற்றுதெறிந்து |
| 335 | 10 | விடுதலை | விருதலை |
| 339 | 1 | கைை | வகை. |
|  | 24 | மென் | னென் |
| 340 | 7 | கதளிற் | கதனிற் |
| 342 | 29 | வள் | வன் |
| 343 | 10 | உலைவு- | தொலைவு, [உலைவு- |
|  | 29 | பாராத | பாரத |
|  | 43 | உறிய | உரிய |

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 351 | 30 | இளிவந்து | இளிவந்த |
| 351 | 32 | ன்றது | கின்றது |
|  |  | தூணி | துனி |
| 352 | 1 | ௩உசு | ௩௬உ |
| 358 | 21 | வுரைக் | வுரை |
| 361 | 30 | மறுதற்கு | மாறுதற்கு |
| 367 | 27 | தேகம் | தேகசம் |
| 369 | 20 | ரெறு | ரெறும் |
| 378 | 9 | ஆராய | ஆராயா |
| 379 | 8 | குடி | குடிப் |
| 383 | 23 | நெடுங் | கெடுங் |
| 390 | 9 | வல்லா' | வல்லார்' |
| 401 | 36 | நல்லன் | நல்லன |
| 402 | 19 | அஞ்சுதல்செய்ய | அஞ்சு |
| 413 | 6 | அவாது | அவரது- |
|  | 7 | யாயினரது- | யாயினரது. |
|  | 8 | யெனப் | பெறப் |
| 415 | 10 | வாளரிநட | வாளரிட |
| 416 | 36 | இல் | இவ் |
| 420 | 3 | வவ்ல | வல்ல |
| 435 | 23 | யாசிரியர் | வாசிரியர் |
| 436 | 4 | தனியரா | தனியனு |
| 443 | 12 | மந்து | பந்து |
|  | 21 | லழிது | லரிது |
| 444 | 22 | குறி | குடி |
| 446 | 8 | தவங்கா | தாங்கா |
| 449 | 26 | சோந | சேர்ந் |
| 455 | 38 | பறுமை | மறுமை |
|  |  | அறனே | அறனைப் [பெருமல் |
| 459 | 40 | தொகு | தொகு |
| 460 | 5 | திளையும் | தினையும் |
| 462 | 18 | பொம்மை | பொய்ம்மை |
| 463 | 12,33,39 | வினர் | வினவர் |
|  | 30 | புன்னந | புன்ன |
| 467 | 10, 26 | கவர்ந்த | கவர்த்த |
| 471 | 33 | த்தா | ததா |
| 472 | 11 | மய | பய |
| 481 | 4 | மகளி | களி |
| 484 | 28 | வற்றின் | வயிற்றின் |
| 487 | 6 | துணிந்து | துணிந்து, |
| 490 | 32 | கூறும், | கூறும் |
| 491 | 22 | சூழ்க | குடி |
| 493 | 37 | பிறந் | பிறந்தார் |
| 495 | 9 | பட்டது | பட்டது. |

| பக். | வரி | பிழை | திருத்தம் | பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 497 | இல் | தலைப்பு கூசு.—குடிமை என்று இருக்கவேணும். | | 543 | 28 | கூட்டும். | கூட்டும் |
| | | | | 546 | 27 | விை வ | விழைவ |
| 502 | 15 | கூசுசு. மயர் | கூசுக. மயிர் | 553 | 40 | யாவது | யாது |
| 504 | 26 | குடிப்யி | குடிப்பி | 555 | 3 | பிற ட | பிறரிட |
| | 37 | இதன் | அதன் | 560 | 27 | பரவை | பாவை |
| 517 | 32 | வழக்கம். | வழக்கம் | | 38 | கயிறு | கயிறு- |
| 518 | 5 | யுடைமை | புடைமை | 564 | 3 | திைன், | திைன். |
| 527 | 13 | தாள் | தான் | | 7 | ககந்த | கலந்த |
| 528 | 31 | த த தால் | ததாதல் | 566 | 12 | காத்த | காத்த) |
| 529 | 11 | ஒன் | ஒண் | | 41 | விடம்பு | வுடம்பு |
| 530 | 15 | ஹுணு | ஹு௵ | 567 | 14 | தென்பதாம், | தென்பதாம். |
| 533 | 11 | அதல | அகல | 568 | 8 | மின்றிப்போ | லின்றிப்பொ |
| 537 | 23 | வாழ்வானைக் | வாழ்வானைச் | | | | |
| 539 | 10 | இவர்க்கும் | 'இவர்க்கும் | | 31 | கரப்பார்— | (கரப்பார்),— |
| 543 | 24 | கண் | கண்— | 574 | 32 | சொல்லிய, | சொல்லிய |
| 575 | 14 | உடுப்பதா முண்பதூங் | உடுப்பதூஉ முண்பதூஉங் | | | | |

## அரும்பதவகராதி முதலியன

| பக். | வரி | பிழை | திருத்தம் | பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 3 | 31 | வற்ல்ல | வல்ல | 13 | 32 | மலத் | நலத் |
| | 46 | குறுப் | குறிப் | 14 | 9 | வாழக் | வழக் |
| 5 | 13 | ஈத்தெரு | ஈத்தொகு | | 34 | மட் | மாட் |
| | 22 | போடுணு | போடுடனு | | 37, 38 | லல் | தல் |
| 6 | 15 | உப்பங் | உப்பக்கங் | 15 | 24 | வலிமி | வலியி |
| 7 | 37 | எதிரகத் | எதிராகத் | 17 | 20 | ரறிய | ரறியா |
| 12 | 6 | கூசை | கூகை | 21 | 24 | மாண் | மாண |
| | 11 | பயிரக்கு | பயிர்க்கு | 21 | 19 | வயிர் | மயிர் |

பல இடங்களில் எழுத்துக்களின் புள்ளிகள் அரைப்புள்ளிகள் கால் புள்ளி தலைப்பிறை முதலியவற்றில் பிழைகள் நேர்ந்துள்ளன: அவற்றை கவனித்துப்பார்ப்பின் படிப்போர்க்கே புலனும். அவற்றை யெல்லாம் திருத்திக்கொள்க



# திருக்குறள்.

## காமத்துப்பால்

**பரிமேலழகருரை:—**இனி அப்பொருளைத் துணைக்காரணமாகவுடைத்தாய் இம்மையே பயப்பதாய இன்பங் கூறுவான் எடுத்துக்கொண்டார். ஈண்டு இன்ப மென்றது - ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலனும் நுகர்தற்சிறப்புடைத்தாய காமவின்பத்தினை. இச்சிறப்புப் பற்றி வடநூலுட் போசராசனும் 'சுவைபலவென்று கூறுவார் கூறுக; யாம் கூறுவது இன்பச்சுவை யொன்றினையுமே' என இதனையே மிகுத்துக்கூறினன். இது, புணர்ச்சி பிரிவுஎன இருவகைப்படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடல்என்பனவோவெனின், இவர் பொருட்பாகுபாட்டினை அறம்பொருளின்பமென வடநூல்வழக்குப் பற்றி யோதுதலான், அவ்வாறே அவற்றைப் பிரிவின்கணடக்கினா ரென்க.

(குறிப்புரை):—காமத்துப்பால் என்பது-காமத்தைப்பற்றியபகுதி என இரண்டனுருபும் பயனும்தொக்க தொகையாக விரியும். காமமாவது - பொருள் துணைக்காரணமாக ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலன்களும் நுகர்தற் சிறப்புடைத்தாய இன்பம். காமவின்ப மென்பதனைக் காமமாகிய இன்பமெனக் கொள்ளாது காமத்தாற் பெறலாகு மின்ப மென்றுகொண்டு, காமமென்பது - மனத்துநிற்குங் காத லென்றலும் உண்டு. ஶ்ருங்காரம் வீரம் கருணம் அத்புதம் ரௌத்ரம் ஹாஸ்யம் பீபத்ஸம் வத்ஸலம் பயாநகம் ஶாந்தம் என்று ஒருசார் அணியியலில்வல்லோரால் பத்துச்சுவைகள் [சுவை - ரஸம்.] கூறப்பட்டுள்ளன: (இவை-முறையே தமிழில் உவகை பெருமிதம் அழுகை மருட்கை வெகுளி நகை இளிவரல் அன்பு அச்சம் அமைதி எனப் பெயர்பெறும்.) இவற்றுள் வத்ஸலமென்பது பெரும்பாலாராற் கூறப்படவில்லை." ஶ்ருங்காரவீரகருணாத்புதரௌத்ரஹாஸ்ய-பீபத்ஸ வத்ஸலபயாநகஶாந்தநாம்ந:|| ஆம்நாஸிஷு͞ர் தஶரஸாநபரேவயந்து- ஶ்ருங்காரமேவரஸநாத்ரஸமாமநாம: " என்பது, போசமகாராசன் இயற்றிய ஶ்ருங்காரப்ரகாஶமென்ற நூலில் முதல்ப்ரகாஶத்திலுள்ள ஶ்லோகமாகும். இது - சிருங்காரம். புணர்ச்சியை ஸம்போகம் என்றும், பிரிவை விப்ரயோகம் அல்லது விப்ரலம்பம் என்றும் கூறுவர். ஏனை - (முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் என்னும்மூன்றனுள் உரிப்பொருளைச்சேர்ந்த புணர்ச்சிபிரிவுகள்தவிர) மற்றையனவான. 'பொருட்பாகுபாட்டினை அறம் பொருள் இன்பம் என வடநூல்வழக்குப்பற்றி யோதுதலான்' என்றது - தென்மொழிவழக்குப் பற்றிக் கூறின், இன்பம் அகம் என்றும், ஏனை அறம்பொருள்கள் புறம் என்றும் இங்ஙன் பாகுபடுத்துக் கூறத்தக்கன ஆதலால், அங்ஙன் கூறாமையால் என்ற கருத்தது. அவ்வாறே - வடநூல்வழக்குப் பற்றிக் கூறிய அவ்வகையாகவே. அவற்றை - இருத்தல் இரங்கல் ஊடல் என்றவற்றை.

## திருக்குறள்

முதலாவது

# களவியல்.

**பரி.**—இனி, அவைதம்மையே தமிழ் நூல்களோடும் பொரு ந்தப் புணர்ச்சியைக் களவுஎன்றும், பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவைமிகுதிபயப்ப உலகநடையொடு ஒப்பும் ஒவ்வாமையு முடையவாக்கிக் கூறு கின்றார். அக்கைகோளிரண்டனுள்ளும் **களவாவது**-பிணிமூப் பிறப்புக்களின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மையராய் உருவுந் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்மு ளொப்புமையுடையராய தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமன்றிப் பால்வகையால் தாமே யெதிர்ப் பட்டுப் புணர்ந்துவருவது. அதனை, ஏழதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கண் **தகையணங்குறுத்தல்** கூறுகின்றார்.

(கு - ரை.) **களவியல**லென்பது - களவைப்பற்றிய இயலென்று விரி யும். அவை தம்மையே - புணர்ச்சிபிரிவுகளையே. களவொழுக்கத் தில் இயற்கைப்புணர்ச்சி இடந்தலைப்பாடு பாங்கற்கூட்டம் பாங்கி யிற்கூட்டம் எனப் பெரும்பாலும் புணர்ச்சியே வருதலும், கற்பொழு க்கத்தில் பொருட்பிரிவு ஓதற்பிரிவு காவற்பிரிவு பகைதணிவினைப் பிரிவு வேந்தற்குற்றுழிப்பிரிவு பரத்தையிற்பிரிவுஎன அறுவகைப் பிரிவு வருதலும் அறிக. தொல்காப்பியனாரும் கற்பைப்பற்றிக் கூறும் போது "பிரிவொடு புணர்ந்தது கற்பெனப்படுமே" எனக் கூறியதுங் காண்க. ஆண்பெண்களாகிய இருவர் கண்டு காதலித்தல் என்பது, உலகத்தோடொத்தது; கூர்வேலிளைஞர் சூழவும் ஆயவெள்ளஞ் சூழ வும் தலைவனும் தலைவியும் ஓர்பொழிலிடத்துச் சேர்தலும், கூர்வே லிளைஞரும் ஆயமும் வெவ்வேறு தொழிலிற் செல்லுதலும், அதனால் இவர் தனிப்படலும் முதலியன - ஒவ்வாதது என்னலாம். **கைகோள் இரண்டு**-களவு கற்பு என்பன. (கை என்றால் ஒழுக்கம்: கோள்-கொள் ளுதல்: எனவே, கொள்ளப்படும் ஒழுக்க மென்பது கைகோளென்ப தன் பொருள். கோள் - தன்மையுமாம்.) கொடுப்பவும் அடுப்பவும் அன்றி - பெற்றோர்முதலியோர் கொடுப்பதும், உறவினர் நண்பர் முதலியோர் அடுத்திருத்தலும் என்ற இவை நேராமலிருக்க. பால் வகையால் - ஊழ்வினையால். இங்ஙனந் தாமே கூடும்கூட்டத்தினைக் **களவு** என்பது - பெற்றோராற் கொடுத்தற்குரிய தலைவியை அவர் கொடுப்பத் தலைவன் கொள்ளாது இருவருங் கலந்த உள்ளத்தோடு புணர்வதாலாகும்: இது முதலிற் பிறரறியாமையிருந்து கற்பின்வழி நின்று விளங்குதலாற் குற்றமின்று மென்ப.

### ௧0௯ - ஆம் அதிகாரம்—தகையணங்குறுத்தல்.

**பரி.**—அஃதாவது - பொழில்விளையாட்டுவிருப்பான் ஆயம் நீங்க அதன்கண் தமியளாய் நின்றாளை, வேட்டவிருப்பான் இளையார்நீங்கத் தமியனாய்வந்து கண்ணுற்ற தலைமகன் அவள்

வணப்புத் தன்னை வருத்தமுறுவித்தலைச் சொல்லுதல். இது, கண்ணுற்றபொழுதே நிகழ்வதாகலின், முதற்கட் கூறப் பட்டது.

(கு-ரை.) மாணுக்கர் அப்பொருளைப்பற்றித் தெரிந்துகொள்ளு மிடத்து முதன் முதலில் ஒருசரித்திரம்போல அறிந்துகொள்வது நலம். அதுவருமாறு: - ஓர்உத்தமபுருஷன் பரிவாரத்துடன் வேட்டை யாடுதற்குப் புறப்பட்டுக் குறிஞ்சிநிலத்துச்சென்ருனாக, ஓர்உத்தம கன்னிகையும் தோழியருடன் பூக்கொய்து விளையாடுதற்கென்று அந் நிலத்து ஒருபூஞ்சோலையிற் சேர்ந்தாளாக, அத்தலைவிசேர்ந்த அள விலே, ஒவ்வொருகாரணமாகத் தோழியர் பிரிய, அக்கன்னிகை அங் குத் தனித்துநின்றசமயத்திலேஒவ்வொருவியாஜத்தாற்பரிவாரங்கள் பிரியத் தனிப்பட்டவனாய் அப்புருஷன் அங்கு வந்துசேர, இருவரும் ஊழ்வினை வயத்தால் இங்ஙனம் தற்செயலாய் ஓரிடத்திலே ஒருவரை யொருவர்கண்டு காதல்கொண்டு காந்தருவமணத்தாற் கூடுவர்: (இது இயற்கைப்புணர்ச்சி முன்னுறுபுணர்ச்சி தெய்வப்புணர்ச்சி காமப்புணர்ச்சி என்ற பெயரால் வழங்கப்படும்.) இங்ஙனம் இயற்கைப் புணர்ச்சி நிகழ்தற்குமுன் தலைவனிடம் காட்சி ஐயம் தெரிதல் தேறல் என்ற நான்கு செய்திகள் நிகழும்: இவை-கைக்கிளையெனப் படும்: (கையென்பது-சிறுமை: கிளையென்பது-உறவு: ஆகவே, கைக் கிளையென்பது ஒருமருங்கு பற்றிய கேண்மை: அதாவது - ஒருதலைக் காமம்.) இந்தக்கைக்கிளையின் பின்னரே களவுப்புணர்ச்சி நிகழுமென் பதை "மெய்க்கிளையாழோர் வேண்டும்புணர்ச்சி முன், கைக்கிளை நிக ழ்தல் கடனென மொழிப" என்பதனாலும் அறியலாம்.

தகை - அழகு, அணங்குஉறுத்தல்-வருத்தமுறச்செய்தல்: இது ஒரு அகப்பொருட்கிளவியாதலால், அணங்குறுத்தலென்பது - அணங்குறச் செய்ததைச் சொல்லுதலைக் காட்டிற்று. ஆயம்-தோழியர்கூட்டம். அதன்கண்தமியளாய் - அச்சோலையில் தனிப்பட்டவளாய். வேட்ட விருப்பான்-வேட்டையாடுவதிலுள்ள விருப்பத்தால். இளையார்-தோழ ரான கூர்வே லிளைஞர். கண்ணுற்ற-கண்ட. தலைமகன் தலைமகளைக் கண்ட காட்சியில் தகையணங்குறுத்தல் நிகழ்வதாதலால், களவிய லில் முதலில் இது கூறப்பட்டதென்று அதிகாரமுறைமைக்குக் கார ணங் காண்க.

கOஅக. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு.

**தலைமகளுருவு முதலியன முன்கண்டறிவனவன்றிச் சிறந்தமையின் அவளைத் தலைமகன் ஐயுற்றது.**

**பரி.**—கனம் குழை - இக்கனவியகுழையையுடையாள்,— அணங்கு கொல் - (இப்பொழிற்கணுறைவாளோர்) தெய்வ மகளோ? ஆய் மயில் கொல் - (அன்றி) ஒருமயில் விசேடமோ? மாதர் கொல் - (அன்றி) ஒருமானுடமாதரோ? என் நெஞ்சு மாலும் - (இவள் இன்னளென்று துணியமாட்டாது) என் னெஞ்சு மயங்காநின்றது; (எ - று.)

ஓ - அசை. ஆய்மயில் - (படைத்தோன் விசேடமாக) ஆய்ந்துபடைத்த மயில்; மயிற்சாதியுள் தெரிந்தெடுத்த மயி லென்றுமாம். கனங்குழை - ஆகுபெயர். கணங்குழையென்று பாடமோதி, பலவாய்த்திரண்ட குழையென்று உரைப்பாரு முளர். எழுதலாகா வுருவுந் தன்வருத்தமும் பற்றி 'அணங்கு கொல்' என்றும், சாயலும் பொழில்வயினிற்றலும்பற்றி 'ஆய் மயில் கொல்' என்றும், தன்னெஞ்சஞ் சென்றமையும் அவ ளெதிர் நோக்கியவாறும் பற்றி 'மாதர்கொல்' என்றும் கூறினன்.

(கு - ரை.) **களவுப்புணர்ச்சிக்குமுன் காட்சிமுதலிய கைக்கிளை நிகழுமென்று கூறினேமன்றே: அவற்றுள் காட்சியென்பது - தலை** வனுந் தலைவியும் தெய்வவசத்தால் எதிர்ப்பட்டுத் தம்முட் கண்ணு றுவது.**ஐயமென்பது**-காட்சிக்குப்பின்,'இங்ஙனந்தோன்றுநின்ற மாது திருமகள்முதலாகியதெய்வமோ? அன்றி, மக்கட்பிறப்பினளோ? என்று ஐயுற்றுக்கூறுவது; இந்தச்செய்யுள் அங்ஙன்வந்த ஐயமாம் எனக. கனவிய - பாரமுள்ள, குழை - காதணிவகை. 'ஆய்மயில்கொல்லோ' என்ற இடத்து, 'கொல்' என்பது வினாப்பொருளைத் தந்திட்டதனால், ஓ-அசையாகும். ஆய்மயில் என்பதற்கு இரண்டு வகையாகப்பொருள் கூறுகிறார்: முதலது-ஆய்ந்துபடைத்தமயிலென்பது: இரண்டாவது (மயிற்சாதியிலிருந்து) ஆராய்ந்தெடுத்த மயிலென்பது: இருவகைப் பொருளிலும், ஆய்மயிலென்பது - வினைத்தொகையே. கனங்குழை யென்பது - கனமாதலையுடைய்குழையையுடையாள் எனப் பொருள் படும்.கனங்குழையென்ற இத்தொடரில் கனம்என்றஅடைமொழியை யடுத்த குழையென்பது குழையைப்பூண்டாளைக் காட்டுவதால், ஆகு பெயர்எனப்பட்டது: அடியார்க்குநல்லார் 'அருந்திறல்'என்பதை அன் மொழித்தொகையாகுபெயரென்று உரைத்ததும் ஈங்குக் காணத்தக் கது: சேனாவரையரும் இங்ஙனமே கூறுவர். இவ்வாறுள்ளவற்றை அன்மொழித்தொகையென்னவேண்டுமேயன்றி ஆகுபெயரென்னலா காது என்று நச்சினார்க்கினியர் மறுத்துரைப்பதை "முதலிற்கூறுஞ் சினையறிகிளவியும்" என்ற வேற்றுமைமயங்கியற்சூத்திரத்தினுரையிற் காணலாம். இந்தப்பரிமேலழகருரைப்படி'கனங்குழை'எழுவாய். கணங் குழை என்றபாடத்தில், கணம் - திரளுதலையுடைய குழை என்க. இச் செய்யுட்குப் பரிமேலழகர் கூறிய உரை சரியன்று என்றும், பாடலின் சொற்கிடக்கைக்கு ஒப்பவே பொருள்கூறுதல் பொருத்தமென்றும் இலக்கணத்திற்கு ஒத்ததென்றும் ஒருசார் ஆராய்ச்சியாளர் கூறும் பொருள்வருமாறு:—(இங்குத் தோன்றும் உரு என எழுவாய் வருவி த்து), அணங்கு கொல்லோ? ஆய்மயில் கொல் ஓ? கனங்குழை - கனவிய குழையையணிந்த, மாதர்கொல்-மானுடமகளோ? என் நெஞ்சு,(இவ்வு ருவத்தினிடத்து),மாலும் என்பது: குழையை மாதர்க்கு அடைமொழி கொடுத்ததனால், மாதர் மானுடமாதராதல் பெறப்படும்: "வண்டே யிழையே...அன்னவைபிறவுமாங்கவணிகழ, நின்றவைகளையும் கருவி யென்ப" என்ற தொல்காப்பியத்துக் களவியற்சூத்திரத்தையும், "இவையெல்லாம் மக்கட்குரியனவாய் நிகழவே தெய்வப்பகுதிமேற் சென்ற ஐயம் நீக்கி, துணியும் உள்ளம் பிறத்தலின்'என்ற உரைநடை

என்றும், அவர்நமக்கும் அன்னராகலின் அப்புலவி பின்னே பேரின்பம் பயவாநின்ற தென்பாள் 'புலத்தலிற் புத்தேணு டுண்டோ' என்றுங் கூறினள். உவமம், பயன்பற்றிவந்தது.

(கு - ரை.) நீர் நிலத்தியல்பாயிருப்பதுபோலத் தலைவரும் தாம் கூடும்மகளிரியல்பினரென்பது 'நிலத்தொடுநீரியைந்தன்னார்' என்பதன் கருத்து. நமக்கும்-நம்மோடுகூடும்பொழுதும். அன்னர்-நம்மியல்பினர். நிலத்தொடுசேர்ந்தநீரும் நிலத்தின் தன்மையதாதல்போலமகளிரொடு கூடிய தலைவரும் அம்மகளிரினியல்பினரென்றுகூறிய உவமை, பயன் விளைத்தல்பற்றிவந்ததாதலால், பயனுவமம். புத்தேள்நாடு-தேவருலகு. (௩)

கக௨ச. புல்லிவிடாப் புலவியுட் டோன்றுமென்
உள்ள முடைக்கும் படை.

'அப்புலவி இனி யாதானீங்கும்?' என்றாட்குச் சொல்லியது.

பரி.—புல்லி - (காதலரைப்)புல்லிக்கொண்டு, விடா - பின் விடாமைக் கேதுவாகிய, புலவியுள் - அப்புலவிக்கண்ணே, தோன்றும் - உளதாம்: என் உள்ளம் உடைக்கும் படை - (அதன்மேற் சென்ற என்னுள்ளத்தைத்) கெடுக்கும் படைக் கலம்; (எ - று.)

'புலவியுள்' என்னும் ஏழாவது, வினைநிகழ்ச்சிக்கண்வந்தது. என்னுள்ளமுடைக்கும் படைக்கலமென்றது, வணக்கத்தையும் பணிமொழியையும். படைக்கலம் என்றாள், அவற்றான் அப்புலவியுள்ளம்அழிதலின். புலவிநீங்குந்திறம் கூறியவாறு.

(கு - ரை.) புலவி கலவியின்பத்தை மிகுவிக்குமாதலால், அந்தப் புலவியை 'புல்லிவிடாப்புலவி' என்றது, புலவியுண்டாம்போது புலவியிற் சென்ற மனத்தையுடைக்கும்படையும் உடன்தோன்றுமென் கிறாளென்க. புலவியென்பதனீற்றிற்சேர்ந்துள்ள 'உள்' என்ற ஏழனுருபின் பொருளை வினைநிகழ்ச்சி யென்றார். படைதோன்றுதலாகிய வினைநிகழ்வது புலத்தல்தொழில் நிகழும்போது ஆதலால், இது வினைநிகழ்ச்சியெனப்பட்டது. இங்ஙன் வருவது வடமொழியில் சதிசத்தமியெனப்படுமென்ப. "உடனிகழ்கின்ற" என்று தொடங்கும் பிரயோகவிவேகச்செய்யுளினுரையில், 'சதிசத்தமியைத் தொல்காப்பியர் வினைசெய்யிடமென்பர் பரிமேலழகர் வினைநிகழ்ச்சியென்பர்' என்று கூறியதும், தொல்காப்பியவுரையில் "வினைசெய்யிடத்தினின்" என்பதற்குத் தட்டுப்புடைக்கண்வந்தான் என்று உதாரணங்காட்டியிருப்பதுங் காண்க. புலவிநீங்குந்திறம் - புலவிநீங்கும்வகை. (௪)

கக௨ரு தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலி னாங்கொன் றுடைத்து.

தலைமகளை யூடலிக்கிக் கூடிய தலைமகன் கழியுவகையனாய்த் தன்னுள்ளே சொல்லியது.

பரி.—தவறு இலர் ஆயின்உம் - (ஆடவர் தங்கண்) தவறிலராயினும், (உடையார்போல ஊடப்பட்டு), தாம் வீழ்வார் மெல்தோள் அகறலின் - தாம்விரும்பும் மகளிருடைய மெல்லியதோள்களைக் கூடப்பெறாதவெல்லைக்கண், ஆங்கு ஒன்று உடைத்து - (அவர்க்கு) அப்பெற்றியதோரின்பம் பயத்தலுடைத்து; (எ - று.)

உடையராயக்கால் இறந்தவின்பத்தோடு வருமின்பமும் எய்துவராகலின் அதுமிகநன்று: மற்றையிலராயக்காலும் வருமின்பத்தையிகழ்ந்ததில்லை யென்னுங் கருத்தால், 'தவறிலராயினு மாங்கொன்றுடைத்து' என்றான். ஊடலினுயவின்பம் அளவிறத்தலிற் கூறற்கரிதென்பான், அப்பெற்றியதொன்றென்றான். தவறின்றியூடியதூஉம் எனக்கு இன்பமாயிற்றென்பதாம்.

(கு - ரை.) கழியுவகை - மிக்கமகிழ்ச்சி. கூடப்பெறாத எல்லைக்கண் - கூடப்பெறாத நிலையேற்பட்டவிடத்து. இன்பம்பயத்தலுடையது, அவ்வூடலின்பின்கூடிய கூடலென்க. மேற்குறளில் புணர்தலினூடலினிது என்பதை விவரிக்குமிடத்து அகன்றுகூடும்வழி ஆராததுமாய்ப் பேரின்பத்துமாம் என்று விவரங்கூறுவதும், அதற்கு உபமானம் அமைந்திருக்கும் வகையும் நோக்குக. உடையராயக்கால் - தவறுடையரானால். இறந்த இன்பம் - கழிந்த இன்பம். இலராயக்காலும் - தவறில்லாதபோதும். வருமின்பத்தை-தவறுடையார்க்கு வரும் இன்பத்தை. அப்பெற்றியதொன்று-அப்படிப்பட்டதொன்று: இன்னபடியுள்ளதென்று வாயாற் கூறமுடியாததொன்று. (ரு)

கங௨சு. உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது,

## இதுவுமது.

பரி.—(உயிர்க்கு), உணலின்உம் - (மேல்)உண்பதனினும், உண்டது அறல் - முன்னுண்டதறுதல், இனிது-இன்பந்தரும்: (அதுபோல), காமம் - காமத்திற்கு, புணர்தலின் - மேற்புணர்தலினும், ஊடல் - (முன்னைத்தவறுபற்றி) ஊடுதல், இனிது-இன்பந்தரும்; (எ - று.)

காமத்திற்கு என்புழிச்சாரியையும் நான்கனுருபும் விகாரத்தாற்றொக்கன. பசித்துண்ணும் வழி மிகவுண்ணலுமாய் இன்*சுவைத்துமாம்: அதுபோல, அகன்றுகூடும்வழி ஆராததுமாய்ப் பேரின்பத்ததுமாமெனத் தன்னனுபவம்பற்றிக் கூறியவாறு.

(கு - ரை.) அறுதல் - சீரணித்தல். காமம் - காமத்திற்கு. இங்கே, 'இன்' சாரியையும் நான்கனுருபும் தொக்கன என்க. ஆராததுமாய் - போதுமென்ற திருப்திபிறவாததாய். (சு)

*பி - ம்:—சுவைத்தது.

கஙௌஎ. ஊடலிற் றோற்றவர் வென்று ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும்.

## இதுவுமது.

**பரி.**—(காமநுகர்தற்குரிய இருவருள்), ஊடலில் தோற்றவர் -ஊடலின்கட்டோற்றவர், வென்றார் - வென்றாராவர்: அது கூடலில் காணப்படும் - அஃது (அப்பொழுதறியப்படாதாயினும் பின்னைப்) புணர்ச்சியின்கண் (அவரால்) அறியப்படும்.

தோற்றவர் - எதிர்தலாற்றாது சாய்ந்தவர். அவர்புணர்ச்சிக்கட் பேரின்பமெய்தலின் வென்றாராயினர். மன்னும் உம்மும், அசைநிலை. யான் அதுபொழுது சாய்தலின், இதுபொழுதுபேரின்பம்பெற்றே னென்பதாம்.

(கு - ரை.) அவரால்-ஊடலில்தோற்றவரால். எதிர்தலாற்றாது சாய்ந்தவர்-எதிர்த்துநிற்கமாட்டாமற் பணிந்தவர். அதுபொழுது - ஊடல்நிகழ்ந்த பொழுது. இதுபொழுது-கூடல்நிகழ்ந்தபொழுது. (எ)

கஙௌஅ. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

## இதுவுமது.

**பரி.**—(இது பொழுதுஇவள்), நுதல் வெயர்ப்ப - நுதல் வெயர்க்கும் வகை, கூடலில் தோன்றிய - கலவியின்கணுளதாய, உப்பு - இனிமையை, ஊடி பெறுகுவம் கொல்லோ-(இன்னும் ஒருகால்) இவளூடி யாம் பெறவல்லேமோ? (எ - று.)

கலவியது விசேடம்பற்றி, 'நுதல்வெயர்ப்ப' என்றான். இனிமை - கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறிதலானாயவின்பம். இனி அப்பேறு கூடாதெனப்பெற்றதன் சிறப்புக்கூறியவாறு.

(கு - ரை.) இனிமை-இங்கே ஐம்பொறிகளானும் நுகரப்படும். இன்பம்: அதனைத் தெரிவிக்கவே, கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறிதலினாலாய இன்பம் என்றாராயிற்று. "கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியும்" என்பது, கீழ் 1101 - ஆம் குறளிலுள்ளது. நுதல்வெயர்த்தல் 'புருஷாயிதம்' எனப்படும் புணர்ச்சியிற் பிறக்கு மென்ப. அப்பேறு - அவ்வினிமையைப் பெறுதல். (அ)

கஙௌகூ. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

## இதுவுமது.

**பரி.**—'ஒளி இழை-ஒளியிழையினையுடையாள், ஊடுக மன் - (இன்னும் எம்மோடு) ஊடுவாளாக: (அங்ஙனம் அவளூடிநிற்

கும்), (அதனைபுணர்த்துதற்பொருட்டு), யாம்இரப்ப - யாம் இரந்துநிற்றற்கும், (காலம்பெறும்வகை), இரா நீடுக மன் - இவ் விரவு விடியாது நீட்டித்தல்வேண்டுக; (எ - று.)

ஊடுக நீடுகவென்பன, வேண்டிக்கோடற்பொருளன. 'மன்' இரண்டும் ஆக்கத்தின்கண்வந்தன. ஓகாரங்கள் அசை நிலை. கூடலின் ஊடலே யமையுமென்பதாம்.

(கு - ரை.) வியங்கோள்கள், வேண்டிக்கோடற்பொருளன. "கழி வேயாக்க மொழியிசைக் கிளவியென், றம்மூன்றென்பமன்னைச் சொல்லே" என்பது, தொல்காப்பியம். மன்-ஆக்கப்பொருளதாதலால் தான், ஊடுகஎன்பது-ஊடுவாளாக எனவும், நீடுக என்பது நீள்வ தாக எனவும் பொருள்பட்டன என்க. மன்என்பவற்றின்பின்னுள்ள ஓகாரங்கள் அசைநிலைப்பொருளன என்றார். (க)

கங்கO. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

## இதுவுமது.

பரி.—காமத்திற்கு இன்பம் ஊடுதல்-காமநுகர்ச்சிக்கின்ப மாவது (அதனைநுகர்தற்குரியரானவர் ஆராமைபற்றித்)தம்மு ளூடுதல்: அதற்குஇன்பம் - அவ்வூடுதற் கின்பமாவது, கூடி முயங்க பெறின் - (அதனை யளவறிந்து நீங்கித் தம்முட்) கூடி முயங்குதல் கூடுமாயின், (அம்முயக்கம்); (எ - று.)

கூடுதல் - ஒத்தவளவினராதல். முதிர்ந்த துனியாய வழித் துன்பம் பயத்தலானும், முதிராத புலவியாயவழிக் கலவியின் பம் பயவாமையானும், இரண்டற்கும் இடையாகிய அளவறிந்து நீங்குதல் அரிதென்பதுபற்றி 'கூடிமுயங்கப்பெறின்' என் றான். அவ்விரண்டின்பமும், யான் பெற்றேனென்பதாம்.

(கு - ரை.) அதனை - அக்காமவின்பத்தை. ஆராமை - அடங் காமை. அதனை - அப்பிணக்கை. அளவறிந்து நீங்கி - கொள்ள வேண்டிய அளவு கொண்டு மிகாதபடி அப்பிணக்கை நீங்கி. புலவி - முதிராத ஊடல்: முதிர்ந்த ஊடல் - துனி: இவ்விரண்டிற்கும்இடைப் பட்ட நிலைமையில் ஊடல் நிகழ வேண்டுமென்க. அவ்விரண்டின்பம்- காமவின்பம். ஊடலின்பம்என்பன. (கO)

பரிமேலழகருரைமுடிபு :—ஈண்டுப் பிரிவினை வடநூன்மதம் பற்றிச் செலவு ஆற்றாமை விதுப்பு புலவியென நால்வகைத்தாக்கிக் கூறி னர்: அவற்றுட் செலவு - பிரிவாற்றாமையுள்ளும், ஆற்றாமை - படர் மெலிந்திரங்கல் முதல் நிறையழிதலீறாயவற்றுள்ளும், விதுப்பு - அவர் வயின் விதும்பல் முதல் புணர்ச்சிவிதும்பலீறாயவற்றுள்ளும், புலவி நெஞ்சொடுபுலத்தல் முதல் ஊடலுவகையீறாயவற்றுள்ளும் கண்டு கொள்க. அஃதேல், வடநூலார் இவற்றுடனே சாபத்தினாய நீக்

க்கினையுங் கூட்டிப் பிரிவினை ஐவகைத் தென்றாரலெனின்,— அஃது அறம் பொருளின்பமென்னும் பயன்களுள் ஒன்று பற்றிய பிரிவு அன்மையானும், முனிவராணையான் ஒருகாலத்துழோர் குற்றத் தாலுளதாவதல்லது உலகியல்பாய் வாராமையானும் ஈண்டொழிக் கப்பட்டதென்க.

(கு - ரை.) கூறினார்என்பதற்கு எழுவாய் திருவள்ளுவர் என் பது. பிரிவு - விப்ரலம்பஶ்ருங்காரம்: அதனை வடநூலார் நான்கா கப் பகுத்துள்ளார்: அவற்றுள் செலவு என்பது - ப்ரவாஸம் எனவும், புலவி-ஈர்ஷ்யா எனவும், விதுப்பு-அபிலாஷமெனவும், ஆற்றாமை- விரஹமெனவும்படும். ஒருசாரார் ஆற்றாமையைக் கருணமென்பர். பிரி வினைக்கூறும்கற்பியலுள், செலவு-பிரிவாற்றாமையென்றவோதிகாரத்தா லும், ஆற்றாமை - படர்மெலிந்திரங்கல் முதல்நிறையழிதலீறாகிய பத்துஅதிகாரங்களினாலும், விதுப்பு - அவர்வயின் விதும்பல் முதல் புணர்ச்சிவிதும்பலீறாகிய மூன்றுஅதிகாரங்களாலும், புலவி-நெஞ் சொடுபுலத்தல் முதல் ஊடலுவகை யீறாகவுள்ள நான்கு அதிகாரங் களாலும் கூறப்பட்டன என, பிரிவு, செலவு முதலிய நான்கனுள் அடங்கும் வகையைக் காட்டினார் பரிமேலழகர். "காமஞ்சான்றகடைக் கோட்காலை, ஏமஞ்சான்ற மக்களொடுதுவன்றி, அறம்புரிசுற்றமொடு கிழவனும் கிழத்தியும், சிறந்ததுபயிற்ற லிறந்ததன்பயனே" என்ற தொல்காப்பியப்பொருளதிகாரச் சூத்திரத்தால், காமத்துப்பாலைக் கூறியகாரணம் பெறப்படும். (க0)

கற்பியல் முற்றிற்று.

காமத்துப்பால் முற்றிற்று.

திருக்குறள் முற்றிற்று.

———

# திருக்குறள் காமத்துப்பாலின் செய்யுண் முதற்குறிப்பகராதி.

[எண் - பக்கவெண்.]

# காமத்துப்பாலின் அருப்பதவகராதி முதலியவை.

[எண் - பாட்டெண்.]

# காமத்துப்பாலின் பிழைத்திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 20 | அதபுதம் | அத்புதம் |
| 8 | 19 | விளேவின்மைம் | ;வளேவின்மை |
| 21 | 30 | வ ட்டம் | வாட்டம் |
| 24 | 37 | கூற்றை | கூற்றை- |
| 29 | 9 | ஈடுப் | ஈடு |
| ,, | ,, | ப ர்கா | பலர்கா |
| 38 | 7 | நூட்ப | நுட்ப |
| 39 | 2 | காதலர் | காதலவர் |
| 43 | 17 | கடுதின் | கடிதின் |
| 47 | 30 | தொழியொடு | தோழியொடு |
| 54 | 18 | தலேவ்ன். | தலேவன்• |
| 57 | 15 | அறவி | அறிவி |
| 66 | 28 | நோ | நோனு |
| 79 | 10 | தெ ன்ற | தலென்ற |
| ,, | 33 | மசலே | பசலே |
| 81 | 14 | க்ள் | கன் |
| 105 | 2 | ஏதிலர்- | ஏதிலர் |
| 109 | 16 | நிற்ப | நிற்ப, |
| 121 | 6 | கோத்த | கோத்த, |
| ,, | 32 | எழுவாய் | எழுவாய். |
| 123 | 25 | மட்டும் | மாட்டும் |
| 128 | 36 | மேலே றி, | மேலேற்றி, |
| 138 | 26 | தெரியாது | தெளியாது |
| 139 | 16 | சொல்லாது) | சொல்லாது), |
| 143 | 37 | இளித் | |
| 144 | 2 | தக்க | |
| 146 | 23 | கஉ௬௫ | கஉ௬௫ |
| 152 | 34 | நீர் பருது | நீர்பெருது |
| 164 | 39 | ஞயத் | ஞய்த் |

89-ஆம் பக்கம் 31-ஆம் வரி தொடங்கி 33 - ஆம் வரி முதலில் கூறளன்றவரையிலுள்ள பகுதி 29-ஆம் வரியில் உதாரணம் என்பதற் குப்பின் இருத்தற்கு உரியது.

# திருக்குறளின் சிறப்புப் பாயிரமாகிய

# திருவள்ளுவ மாலை.

க.—அசரீரி.

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோடு
உருத்தகு நற்பலகை யொக்க — இருக்க
உருத்திர சன்ம ரெனவுரைத்து வானில்
ஒருக்கவோ வென்றதோர் சொல்.

**பதவுரை:**—திரு தகு தெய்வம் - அருட்செல்வத்தையும் (அதற்குத்) தக்க தெய்வத்தன்மையையு முடைய, திருவள்ளுவரோடு—, உரு தகு நல் பலகை - (அவரிருத்தற்குத் தனது) உருவத்தினாலே தக்க நல்ல சங்கப்பலகையிடத்து, உருத்திரசன்மர்—, ஒக்க இருக்க என உரைத்து - சமானராயிருக்கக்கடவரென்றுசொல்லி, வானில் - ஆகாசத்திலிருந்து, ஒருக்க - (அவ்விடத்துள்ள புலவர் கருத்தையெல்லாம்) ஒற்றுமைசெய்யும்படி, ஓர் சொல் - ஒருவாக்கியம், ஓஎன்றது - ஓஎன்று இரைந்தெழுந்தது; (எ - று.)

**விசேடவுரை:**—"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்" என்பவாகலின், திருவென்றதற்கு அப்பொருளுரைக்கப்பட்டது. தெய்வத்தன்மை - தெய்வத்தி னவதாரமாய் விளங்குகை. தெய்வத்தன்மை இல்லார்க்கு அருளுளதாயினும் அதனாலே பெரும்பயன் விளையாமையின், தகுதிசொல்லப்பட்டது. திருவள்ளுவரென்னும் பெயருள் திருவென்பது உயர்வையும் வள்ளுவரென்பது வண்மையையுடையரென்பதையும் விளக்கிநின்றன வாகலின், அது வேதத்தில் இலைமறைகாய்கள்போற் பலவிடங்களினும் மறைந்து வெளிப்படாதிருந்த மெய்ப்பொருள்களையெல்லாம் தொகுத்து உலகத்தாருக்குக் கொடுத்து அருள்செய்தவ ரென்னுங் காரணம்பற்றிவந்த பெயராயிற்று. வள் - முதனிலை, அர் - இறுதிநிலை, உ - சாரியை. அம்முதனிலைக்குப் பொருள் - ஈகை. உருத்திர சன்மர் - உருத்திரனால் அடைந்த ஜன்மத்தை யுடையவ ரென விரியும்: அவர் முருகக்கடவுளது திருவவதாரமாய் வணிகர்மரபிற் றோன்றிய மூங்கைப்பிள்ளையார். அசரீரி - அருவமாய் எங்கும் நிறைந்துள்ள முதற்றெய்வம். அரங்கேற்றத் தொடங்கிய காலத்துத் தெய்வப்புலவரோடு ஒப்ப விருந்து கேட்டற்குத் தகுதியுடையோர் யாரென யாவரும் எண்ணமுற்று நின்றவழி, இவ்வசரீரி வாக்கியம் பிறந்தது. என்றதெனப் படர்க்கை வினையாக் கூறலின், ஆண்டுநின்று கேட்ட புலவர்களுள் ஒருவர் அதனை இங்ஙனம் பாடலாகச் செய்தன ரென்றறிக. (க)

உ.—நாமகள்.

நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதப்பகர்ந்தேன்—கூடாரை

எள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

**பத:**—கூடாரை எள்ளிய வென்றி இலங்கு இலை வேல் மாற - பகைவரை(ப் புறங்கொடுக்கச்செய்து) இகழ்ந்த வெற்றியை உண்டாக்கி விளங்காநின்ற இலைபோலும் தகட்டுவடிவாயுள்ள வேற்படையையுடைய பாண்டியராசனே! நாடா - (உலகத்தார் விதிவிலக்குகளை அறிந்து உய்யும்வழியை) நாடி, முதல் - படைப்புக்காலத்திலே, நான்முகன் நாவில் - பிரமனது நாவிலிருந்து, நான்மறை பாடா - (இருக்கு முதலாகிய) நான்கு வேதங்களையும் பாடி, இடை - (இதற்கும் அதற்கும்) நடுவானகாலத்திலே, பாரதம் பகர்ந்தேன் - பாரதமாகிய வேதத்தைச்சொல்லினேன்: பின் - (அதற்குப்) பிற்பட்ட இக்காலத்திலே, என் வாக்கு—, வள்ளுவன் வாயது - (திருக்குறளாகிய வேதத்தைச் சொல்லி) வள்ளுவன்வாயின்கண்ணதாயிற்று, (எ - று.)

**விசே:** —வேதமும் சந்தோரூபமாகையால் பாடா என்றாள். தன் கணவனாகலின் நான்முகனாவி லிருந்தென்றும், அவனவதாரமாகலின் வள்ளுவன்வாயதென்வாக்கு என்றும் கூறினாள். பாரதம் வியாசரைக்கொண்டு சொல்லப்பட்டது. இதனால், நான்மறை - பூர்வவேதமும், பாரதம் - மத்தியவேதமும், திருக்குறள்-உத்தரவேதமும் என்றதாயிற்று. பூர்வவேதம் பின் வியாசரால் நான்காக வகுக்கப்பட்டமை பற்றி நான்மறையெனப் பட்டது. அன்றி நாவெனைப்பிரித்து எழுவாயாக்கினுமாம். வேதம் மூவகைத்தென்பதூஉம், இவற்றது தோற்ற முறையால் இது வாக்கியப்பிரமாணத்திற்சிறப்புடைத்தென் தூஉம் சொல்லியபடி. (உ)

## ௩.—இறையனார்.

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

**பத:**—மன் புலவன் வள்ளுவன் வாய் சொல் - புலவர்க்கரசனாகிய வள்ளுவன்வாயிற் பிறந்த திருக்குறளானது, என்றும் யாணர் புலராது-எக்காலத்தும் தன்னழகுகெடாமல், நாள் செல்லுகினும் நின்று அலர்ந்து - நெடுங்காலங் கழியினும்நிலைபெற்றுமலர்ந்து, தேன் பிலிற்றும் நீர்மையது ஆய் - தேனைச்சொரிகின்ற குணமுடையதாய் (விளங்குமாதலால்), குன்றாத செந்தளிர் கற்பகத்தின் - குறைவுபடாத செய்யதளிர்களையுடைய கற்பகத்தினது, தெய்வத் திருமலர்போன்ம்- தெய்வத்தன்மைபொருந்திய உயர்வாகியமலர்போலும்; (எ - று.)

**விசே:**—திருக்குறளுக்கு ,அழகு-சொன்முடிபு பொருண்முடிபின் குணங்களும், அலர்தல் - எங்கும் பரவுதலும், தேன்பிலிற்றல் - இருமையின்பங்களும் விளைத்தலுமாம். சொல்—ஆகுபெயர். இறையனார் கடவுளாகலின், இனி இதிற் சிறப்புடைதொன் றுளதாவதின் றென்னுந் துணிவு தோன்ற ‘என்றும்’ என்றும், பின்னும் அதனை வலியுறுத்தற்கு ‘நாட்செல்லுகினும்நின்று’ என்றும் வாழ்த்துப்பொருள்

பட இவ்வாறுகூறினர். இஃதழியாது நின்று பெருகிப் பயன்படுமாறு சொல்லியபடி. (௩)

### ௪.—உக்கிரப்பெருவழுதியார்.

**நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்**
**தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த — நூன்முறையை**
**வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சம்**
**சிந்திக்க கேட்க செவி.**

**பத**:—வள்ளுவனாய்—, தான் மறைந்து-தனது திருமேனியை மறைத்து, நான்மறையின் மெய்ப்பொருளை-நான்கு வேதங்களினுண்மைப் பொருளை, தந்து - (இவ்வுலகத்திலே) கொணர்ந்து, முப்பொருள் ஆ-(அறம் பொருளின்பமென்னும்) முப்பாற்பொருளதாக, நான்முகத்தோன் - பிரமனால், உரைத்த - திருவாய்மலர்ந்தருளப்பட்ட, நூல் - நூலினது முறையை - புத்தகத்தை, சென்னி வந்திக்க - (எனது) தலையானது தொழக்கடவது: வாய் வாழ்த்துக - வாயானது வாழ்த்தக்கடவது: நல் நெஞ்சம் சிந்திக்க - நல்ல மனமானது நினைக்கக்கடவது: செவி கேட்க - காதுகளானவை கேட்கக் கடவன; (எ-று.)

**விசே**:—முப்பொருள்—ஆகுபெயர். இவ்வேதப்பொருள் ஆதியிலே வேதஞ் சொல்லியோனாலேயே சொல்லப்பட்டமையால் உலகத்துச் சமயாசாரியர்களாலும், பிறராலும் ஒன்றற்கொன்று மாறாகக் கொள்ளப்பட்ட பொருள்கள் போல்வதன்றென்பது தோன்ற 'மெய்ப்பொருள்' என்றார்- கலையுணர் புலமையில் தலைமையோனாகி விதிமுறைவழாது முதுநிலம்புரக்கும் பெருந்தகையுக்கிரப்பெருவழுதியென்னுந் தன்னிகரில்லாமன்னவர்பெருமான் தான் மேற்கொண்ட சிறப்பைப் பலரும் அறிந்துமேற்கொள்ள இவ்வாறு வழிபாடு கூறினன்: "மன்னனெப்படி மன்னுயிரப்படி" ஆகலின். இப்புத்தகத்தை முன்னே பூசித்து மெய்ம்மொழி மனங்களால் வணக்கஞ்செய்து பின் கேட்க வேண்டுமென்று சொல்லியபடி. (௪)

### ௫.— கபிலர்.

**தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட**
**பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு**
**வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்**
**வெள்ளைக் குறட்பா விரி.**

**பத**:—மனை அளகு வள்ளைக்கு உறங்கும் வளம் நாட - மனையில் வளர்க்கப்படுகின்ற பறவைப்பேடுகள் உலக்கைப்பாட்டால் கண்ணுறங்குகின்ற வளம்பொருந்திய நாட்டையுடைய அரசனே! வள்ளுவனார் வெள்ளைக் குறட்பா விரி - திருவள்ளுவராலருளிச்செய்யப்பட்டகுறள் வெண்பா (மிகப்பெரியபொருளைத்) தன்னுட்கொண்டு காட்டுதல்,— தினை அளவு போதா சிறு புல் நீர் - தினையரிசியளவுக்கும் போதாத சிறிய புல்லினது நுனியின்கணுள்ள பனிநீரானது, நீண்ட பனை அளவு காட்டும் படித்து - உயர்ந்த பனையினளவான அதன் சாயையைத் தன்னுட்கொண்டுகாட்டுங் குணம்போலுள்ள குணத்தையுடைத்து; (எ - று.)

விசே:—பனையளவு—ஆகுபெயர். ஆல்-அசை. பறவை-கிளிமுதலியவை. உலக்கைப் பாட்டு-மகளிர் பரிமளப்பொடி இடிக்கின்றபோது பாடும் பாட்டு. விரி-விரித்தல். எப்படி மிகச்சிறிய பனித்துளியிலே மிகப்பெரிய பனைமரத்தின்சாயை அடங்கிவிளங்குகின்றதோ, அப்படியே மிகச்சிறிய இக்குறள்வெண்பாவில் மிகப்பெரிய பொருள் அடங்கிவிளங்குகின்றதென்பதாம். இது சுருங்கியிருந்தும் விரிவான பொருளை விளக்குமாறு சொல்லியபடி. இதுமுதலியன சங்கத்துப்புலவராலே பாடப்பட்டன. (ரு)

## சு.—பரணர்.

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுது நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து.

பத:—மாலும் - திருமாலும், குறள் ஆய் - குறளாய்ப்பிறந்து, வளர்ந்து—, இரண்டு மாண் அடியான்-இரண்டுபெரிய அடிகளால், ஞாலம்முழுதும் - உலகமனைத்தையும், நயந்து அளந்தான்-விரும்பி அளந்தான்: வால்அறிவின் வள்ளுவரும் - மெய்யறிவினையுடைய திருவள்ளுவரும், தம் குறள்வெண்பா அடியால் - தம்மினின்றுந் தோன்றி(அந்நிலைநிற்கின்ற)வெண்பாக்குறளின்(இரண்டுசிறிய) அடிகளால், வையத்தார் உள்ளுவ எல்லாம் - அவ்வுலக மனைத்தினுமுள்ளோரால் நினைக்கப்பட்டவற்றை யெல்லாம், ஓர்ந்து அளந்தார் - ஆராய்ந்து அளந்தார்; (எ - று.)

விசே:—உம்மையிரண்டும்-முறையே தேவரிற்பெரியோனாகிய வென்றும், மனிதரிற்சிறியராய்க்காணப்பட்ட வென்றும் பொருள்படநின்றன. உவமானத்திலே வளர்தலும் பெருமையும் சொல்லுதலால், உவமேயத்திலே அவற்றுக்கு மாறாகிய நிலைநிற்றலும் சிறுமையும் வருவிக்கப்பட்டன. மாலுக்குத் தானே குறளாதலும் பின்பு அந்நிலை நில்லாதுவளர்தலும் பேரடிகளால் அளவுபட்ட உலகத்தையளத்தலும்,திருவள்ளுவருக்குத் தம்மினின்றுங் குறளைஉண்டாக்குதலும், அது தன்னிலைநிற்றலும், அதன் சிற்றடிகளால் அளவுபடாத நினைப்பின் விடயங்களை அளத்தலும் சொல்லப்படுதலால் வேற்றுமையறிக. நினைக்கப்பட்டனவெல்லாம் இதனகத்து அளவுசெய்யப்பட்டமைசொல்லியபடி. (சு)

## எ.—நக்கீரர்.

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆனு வறமுதலா வந்நான்கும்—ஏனோருக்கு
ஊழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று.

பத:—தானே முழுதுஉணர்ந்து-தாமே (வேதப்பொருள்) அனைத்தையும் அறிந்து, தண் தமிழின்-தண் தமிழின்கண், வெண்குறளால்-குறள்வெண்பாக்களால், ஆனு அறம் முதல் · ஆ அந்நான்கும்

- விட்டுநீங்குதல்கூடாத அறம் முதலாகிய அந்நான்கு பொருள்களை யும், ஏனோருக்கு- அவற்றையறியாதவர்களுக்கு, (அவர் எளிதினறிய), ஊழின்-முறையால், உரைத்தாற்கும்-சொல்லியருளிய திருவள்ளுவர்க் கும், ஒள் நீர் முகிலுக்கும்-ஒள்ளிய நீரைத்தந்த மேகத்துக்கும், உலகு- இவ்வுலகமானது, மற்று என் ஆற்றும் - எதிர்நன்றியாதுசெய்யும்? [செயக்கிடந்தது ஒன்றும் இல்லை:] வாழி-(அவரும் அதுவும்)வாழ்க.

**வீசே.**—ஆனுமை - நீங்காமை. 'தானே முழுதுணர்ந்து' எனவே, ஆசாரியராயிருந்து பிறரறிவிக்க அறிந்திலரென்றதாயிற்று. முழுது மென்னு மும்மை தொக்கது. ஒண்மை - இனிமைமேல் நின்றது. முறை- நூலின் முப்பொருள்களின் கிடக்கையொழுங்கு. நாயனார் கொடைச்சிறப்புச் சொல்லியபடி. (எ)

## அ.—மாமூலனார்.

அறப்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.

**பத.**—அறம் பொருள் இன்பம் வீடு என்னும் அந்நான்கின் திறம் - அறம்முதலாகச் சொல்லப்பட்ட அவ்வேதப்பொருள்களாகிய நான்கனது கூறுபாட்டையும், தெரிந்து - அறிந்து, செப்பிய-(உலகத் தார்க்குச்) சொல்லிய, தேவை-தேவனை, மறந்தேயும் - மறந்தாயினும், வள்ளுவன் என்பான் -(ஒருமனிதனாக உட்கொண்டு) வள்ளுவ னென்று சொல்லுதற்கு ஒருவனுளனாயின் அவன், பேதை - அறி வில்லாதவனாவன்: அவன் வாய் சொல் - அவனது வாயிற்பிறந்த அச்சொல்லை, அறிவுடையார்—, கொள்ளார் - கொள்ளமாட்டார்.

**விசே.**—அறம்முதலியவற்றின் கூறுபாடு-அவற்றினது தொகை வகைவிரிகள். மறந்தேயும் என்றதனால், நினைப்புடன் சொல்லு வோன் பேதையிற் பேதையாமென்றதாயிற்று. முன்னும் பின்னு முள்ள பாட்டுக்களில் இப்பெயர் தெய்வத்தன்மையைக் குறிப்பிக்கும் படி நன்கு மதித்து உயர்த்திச்சொல்லப்படுதலால், ஒருமனிதனாக உட்கொண்டென்பது வருவிக்கப்பட்டது: அன்றி, ஒலிக்குறிப்பி னாலே, சாதியிழிவுதோன்ற வள்ளுவனென்பா னெனினு மமையும். இக்குறிப்பொலியை வடநூலார் காகுசுரமென்பர். தெய்வப்புலவரை அவமதிப்பினிழிவு சொல்லியபடி. (அ)

## கூ.—கல்லாடர்.

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப வாறு சமயத்தார்—நன்றென
எப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

**பத.**—ஆறு சமயத்தார் - அறுவகைமதத்தோருள், ஒன்றே பொருள் எனின்-(ஒருமதத்தார் தமது நூலிலே உலகமும் உயிரும் கட வுளுமாகிய) பொருள்கள் ஒன்றேயென்று நாட்டுவராயின், வேறு

என்ப - (மற்றொருமதத்தோர் தம்து நூலிலே அதனை மறுத்து அவை) வேறாமென்று நாட்டுவர்: வேறு எனின்-(அப்படி) வேறென்றுநாட்டின், அன்று என்ப-பின்னொரு மதத்தோர் அதனை) அன்றென்றுமறுப்பர்: (ஆதலால் சமய நூல்களெல்லாம் இவ்வாறு மறுக்கப்படுகின்றன): வள்ளுவனார் முப்பால் மொழிந்த மொழி-திருவள்ளுவராலே-முப்பாலாகச் சொல்லப்பட்ட நூலை, நன்று என-நன்றென்று கொள்ளுதற்கு, எப்பாலவரும் - எவ்வகைப்பட்ட பகுதியோரும், இயைப-உடன்படுவார்; (எ - று.)

மொழி - ஆகுபெயர். ஆறுமதமாவன - வியாசமதம், சைமினிமதம், பதஞ்சலிமதம், கபிலமதம், கணாதமதம், அக்ஷபாதமதம்: அன்றிச் சைவம் வைணவம்முதலியவற்றைக் கூறினுமாம். எச்சமயத்தாருமென்னாது எப்பாலவரும் என்றதனால், வேதத்துக்கு உட்பட்ட சமயத்தாரேயன்றிப் புறம்பான சைனம், பௌத்தம் முதலிய மதத்தாரும், பலவகைப்பட்ட சாதியாரும், தேசத்தாரும், காலத்தாரும், பிறரும் தழுவப்படுதலறிக. இதுவே பொதுவேத மென்றபடி. (கூ)

## க0—சீத்தலைச் சாத்தனார்.

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியும்
முரமரசு முத்தமிழு முக்கொடியும்—மும்மாவும்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

பத.—வள்ளுவர்-திருவள்ளுவரது, பா முறை தேர் முப்பால் - பாக்களின் (முன்பின்) முறைதெரிதற்கிடனாகிய திருக்குறளானது,—மும்மலையும்-(கொல்லிமலை நேரிமலை பொதியமலை எனப்படுகின்ற) மூன்றுமலைகளையும், முந்நாடும் - (குடநாடு புனனாடு தென்னாடு எனப்படுகின்ற) மூன்றுநாடுகளையும், முந்நதியும் -(பொருனைநதி காவிரிநதி வையைநதி எனப்படுகின்ற) மூன்று நதிகளையும், முப்பதியும் - (கருவூர் உறையூர் மதுரை எனப்படுகின்ற) மூன்று பதிகளையும், மும்முரசும்-(மங்கலமுரசு வெற்றிமுரசு கொடைமுரசு எனப்படுகின்ற) மூன்று முரசுகளையும், முத்தமிழும்-(இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் எனப்படுகின்ற) மூன்றுதமிழ்களையும், முக்கொடியும்-(விற்கொடி புலிக்கொடி மீனக்கொடி எனப்படுகின்ற) மூன்று கொடிகளையும, மும்மாவும் (பாடலம் கோரம் கனவட்டம் எனப்படுகின்ற) மூன்று குதிரைகளையும், தாம் உடைய மன்னர் - தாம் முறையேயுடைய (சேரசோழபாண்டியர் எனப்படுகின்ற) மூவரசருடைய்வும், தட முடிமேல்-பெரிய முடிகளின் மேலே (கொள்ளப்பட்ட), தார் அன்றே - மாலையன்றோ?

விசே:—அன்றே என்றது பலரறிதேற்றம். முப்பால்-ஆகுபெயர். மும்முரசும் முத்தமிழும் அம்மூவரசர்க்கும் பொதுமையவாயினும் இம்முறையுரிமை அவர் குடிமரபிற்குஇயைந்தனபோலும். அரசர்மூவரும் மேற்கொண்ட சிறப்புச் சொல்லியபடி. (க0)

## கக,—மருத்துவன்றாமோதரனார்.

சிந்திநீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தி

**மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்**
**தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.**

**பத:**—காந்தி மலை குத்து மால் யானை-(தன்பகையென) வெகுண்டு மலையைக்குத்துகின்ற பெரிய களிறுபோலுள்ள அரசனே! சிந்தி நீர்க்கண்டம்-சிந்திநீர்ச் சருக்கரையையும், தெறி சுக்கு சிதைக்கப்பட்ட சுக்கையும், தேன் அளாய் - தேனோடு கலந்து, மோந்தபின்—,(அதனால்), யார்க்கும் (தலைக்குத்துடையோர்)யாவருக்கும், தலைக்குத்து—, இல்-இல்லையாகும்: வள்ளுவர் முப்பாலால்—, சாத்தற்கு-சீத்தலைச் சாத்தனார்க்கு, தலைக்குத்து—, தீர்வு - இல்லையாயிற்று; (எ - று.)

**விசே**—யானைபோல்பவனை யானையெனலால் ஆகுபெயர். முன் கேட்கப்பட்ட நூல்களிலெல்லாம் பலசொற்குற்றங்களும் பொருட்குற்றங்களும் கண்டு பொறாமல் தலையில் அறைந்துகொண்டு வந்தமையால் புண்பட்டுக் குத்தல்உண்டாயிருந்தது: இதன்கண் ஓர் குற்றமுங் காணப்பெறாமையால் அது நீங்கிற்றென்க. எப்படி அம்மூன்று சரக்கும் அதற்குமருந்தாமோ, அப்படியே இதற்கு இம்மூன்று பாலும் மருந்தாயின வென்பதாம். தீர்வென்னுந் தொழிற்பெயர் முற்றுப்பொருளில் வந்தது. இதன்குற்றமற்று விளங்குகை சொல்லியபடி.

### கஉ.—நாகன்றேவனார்.

**தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை**
**வேளா தொழிதல் வியப்பன்று – வாளாதாம்**
**அப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்**
**முப்பான் மொழிமூழ்கு வார்.**

**பத:**—தாள் ஆர் மலர்பொய்கை-நாளத்தோடுபொருந்திய தாமரை மலர்களையுடைய ஒரு குளத்து நீரின் கண்ணே, குடைவார் - மூழ்குவோர்,-தாம்-, தண்ணீரை - (வேறு) தண்ணீரை, வேளாது ஒழிதல்-விரும்பாதொழிதல், வியப்பு அன்று - வியப்பைச் செய்வதன்று: வள்ளுவனார் முப்பால் மொழி - திருவள்ளுவரதுமுப்பால்களையுடைய நூலின்கண்ணே, மூழ்குவார்—, தாம்—, வாளா - வீணாக, அப்பால்—, ஒருபார்வை - ஒருநூலை, ஆய்பவோ - விரும்புவாரோ? [விரும்பார்].

**விசே:**—குளிர்ச்சி இன்சுவை நறுமணம்முதலிய குணங்களாலே சிறந்த ஒரு தாமரைக் குளத்து நீரைப் பெற்றோர்க்கு அதனாற்றனே அமைதிபெற்று வேறுதண்ணீரைப் பெறவிரும்பாமை வியப்பன்று: அதுபோல திருவள்ளுவரின் முப்பால்மொழியில் மூழ்குவார் பிறநூலை ஆராயவிரும்பாரென்பதாம்; **எடுத்துக்காட்டுவமையணி.** மூழ்குதல் - இங்கே கருத்துமுழுதும் அழுந்திநிற்றன்மேனின்றது. இதனால், இந்நூலகத்து எந்நூற் பொருளும் அடங்கியிருக்கின்றமை குறிக்கப்பட்டது. பல நூல்களையும் கற்கவிரும்புவோர்க்கு இஃதொன்றே அமைதல் சொல்லியபடி. தாளார் மலரெனலால், தாமரைமலரெனப்பட்டது. வியப்பைச்செய்வதை வியப்பு என்றார். இனி, ஒருசாரார், மலர்ப்பொய்கைகுடைவார் வேறுதண்ணீரை வேளாதொழிதல்

வியப்பன்று என்றமையால், வள்ளுவர் முப்பால்மூழ்குவார் அப்பால் ஒருபாவையாயாமை வியப்பு என்பது பெறப்படும் என்ப: இது காறும் கற்போர் ஒருநூலைக் கற்பின் மற்றும் வெவ்வேறு நூலைக் கற்றல் இயல்பாயிருக்க, வள்ளுவர் நூல்தோன்றியபின் வேறுநூலைக் கற்க வேளாமையால் இது வியப்பாயிற்றென்க. மொழிபா - நூலுக்குக்காரணஆகுபெயர். ஓகாரம் - எதிர்மறை. விரும்புதலாகிய காரணத்தை ஆய்பவோ எனக் காரியமாக் உபசரித்தார். (௧௨)

## ௧௩.—அரிசில்கிழார்.

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்.

பத.—பரந்த பொருள் எல்லாம்-(வேதத்திலே) ஒன்றோடொன்று மயங்கிநின்ற நால்வகைப் பொருள்களையும், பார் அறிய - இப்பூமியிலுள்ளோர் அறிதற்பொருட்டு, வேறு தெரிந்து - வேறாகப்பிரித்து, திறம் தொறும் சேர-(அது அது தனது தனது) வகையோடு சேரும்படி, சுருங்கிய சொல்லால்-சில சொற்களால், பொருள் விளங்க-கருத்துத்தோன்றும்படி, விரித்துச் சொல்லுதல்-விரியும்படி வைத்துச் சொல்லுதற்கு, வல்லார் - வல்லவர், வள்ளுவர் அல்லால்-, ஆர்-? [ஒருவரும் இல்லை]; (எ - று.)

பார்-ஆகுபெயர். திறம் - அறம்முதலியவற்றின் கூறுபாடு. சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல்முதலிய அழகுகள் எப்படி இவரால் அமைக்கப்பட்டனவோ, அப்படிப் பிறரால் அமைக்கப்படுதல் கூடாமை காட்டியதாயிற்று. நூலுக்கும் நாயனார்க்கும் தகுதி சொல்லியபடி. (௧௩)

## ௧௪.—பொன்முடியார்.

கானின்ற தொங்கலாய் காசிபனூர் தந்ததுமுன்
கூநின் றளந்த குறளென்ப —நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தாநின் றளந்த குறள்.

பத:—கான் நின்ற தொங்கலாய் - மணம் தங்கப்பெற்ற மாலையையுடைய பாண்டியராசனே! முன்-முற்காலத்திலே, காசிபனூர் தந்தது-காசிபராலேதரப்பட்ட குறளை, கூ நின்று-மண்ணில்கண்ணே நின்று, அளந்த - (உலகத்தை) அளந்த, குறள் என்ப - குறளென்று சொல்லுவர்; தாம் நின்று - தாம் (இங்கே) எழுந்தருளி, வள்ளுவனார் அளந்த குறள் - திருவள்ளுவராலே தரப்பட்ட குறள் நூல் முறையான் - நூலின்முறையோடு கூடி, வான் நின்று - விண்ணின் கண்ணே நின்றும், மண் நின்று - மண்ணின்கண்ணே நின்றும், அளந்தது - (உலகத்தை) அளந்தது; (எ - று.)

விசே:—அக்குறள் வஞ்சித்துப்பெற்று அளத்தலால் நூன்முறையோடு கூடாததாயிற்று. முன் 'மாலும்' (௬) என்னும்பாட்டிலேநாயனார்க்

கும் மாலுக்கும், இப்பாடலிலே திருக்குறளுக்கும் மாலவதாரக்குறளுக்கும் ஒப்புமை குறித்து, இக்குறளுக்கு நான்மறையோடு கூடலும் வானிற்றலும் மிகுத்துச்சொல்லி வேற்றுமை செய்தது, வேற்றுமையணியாம். இக் குறளுக்கு ஒலிவடிவம் வரிவடிவமென இரண்டு வடிவுண்மையாலும், ஒலிவடிவுக்கு இடம், வானும் வரிவடிவுக்கிடம் மண்ணும் ஆதலாலும், வானின்று என்றும் மண்ணின்று என்றும் கூறினர். உலகத்துப் பொருளெல்லாம் இஃதளத்தற்சிறப்புச்சொல்லியபடி. கு-கூஎன நீண்டது: ஆனுருபு ஒடுவுருபின் பொருளில் வந்தது. (கச)

## கரு.—சோகுமனர்.

ஆற்ற லழியுமென் றந்தணர்க ளன்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார்—ஏட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனர் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று.

பத:—அந்தணர்கள்—, நான்மறையை - நான்கு வேதங்களையும், உரைத்து - வாய்ப்பாடமாக்கி, போற்றி-காப்பாற்றி, ஆற்றல் அழியும் என்று - (ஏட்டின்கண் எழுதிவைத்தால் உச்சரிப்பு முறையை யறிந்து சொல்ல மாட்டாதார்க்குக் கருதிய பயனைத்தரும்) வலிமை குறையுமென்று, ஏட்டின் புறத்து - ஏட்டின்கண், எழுதார் - எழுதார்கள்; வள்ளுவனர் முப்பாலை - திருவள்ளுவரது திருக்குறளை, ஏட்டு எழுதி-ஏட்டின்கணெழுதிவைத்து, வல்லுநரும் - அறிவின் வலியுடையவரும், வல்லாரும்-வலியில்லாரும், சொல்லிடினும்-ஓதினும், ஆற்றல் சோர்வு இன்று - பொருள்வலிமை குறைதலில்லை.

விசேட—: அவ்வேதத்துக்கு உதாத்தம் அனுதாத்தம் சுவரிதமென்னுஞ்சுரங்களின் வழுவாமலோதல்வேண்டுமென்னும் விதியுளதாதலின், அதற்குத்தகுதியுடைய அந்தணரே அதிகாரிகளாயினர்; இதற்கு அஃதில்லாமையால் யாவரும் அதிகாரிகளாவரென்றறிக. சொல்லிடினும் என்றதனால், பொருளுணர்ச்சிக்கும் இதற்கும் வலிமை வேண்டுமென்பது பெறப்பட்டது. ஆற்றல்-சொற்செறிவின்றிட்பம். இங்ஙனங் கூறவே, அவ்வேதம் சொல்லின்கண்ணே தலைமையுடைத்தென்பதூஉம், இவ்வேதம் பொருளின்கண்ணே தலைமையுடைத்தென்பதூஉம் பெறப்பட்டன. ஒருப்படுதலின் அவ்வேதத்தினும் இது சிறப்புடைமை சொல்லியபடி. இச்செய்யுளிலும் வேற்றுமையணி காணலாம். (கரு)

## கசு—நத்தத்தனர்.

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னேடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.

பத:—பாயிரத்தினேடு-பாயிர நான்கதிகாரங்களோடு, ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும்-(சேர்ந்து தொகையாகிய) அரிய

ஆயிரத்து முந்நூற்றுமுப்பது குறள்வெண்பாக்களையும், பகர்ந்ததற்பின் - ஓதியுணர்ந்தபின்பு,—ோய்—,ஒருத்தர் வாய் - ஒருவரது வாயாலே, கேட்க - கேட்டறிதற்கு, நூல் உளவோ - வேறுநூல்கள் இருக்கின்றனவோ? [இல்லை என்றபடி]: மன்னு தமிழ்ப்புலவர் ஆய்-நிலைபெற்ற தமிழிலே புலமை நிரம்பியோராகி, கேட்க-(பிறர் தம்மிடத்துவந்து) கேட்கும்படி, வீற்றிருக்கல் ஆம்-சிறப்பாகவிருக்கலாம்.

விசேட:—வீற்றிருத்தல்-ஒரு சபைநடுவிலேஉயர்வாகியஆதனத்திலேறி உயர்வுதோன்றஇருத்தல். இவற்றுட் பலவகைப்பட்ட நூல்களின்கருத்துக்களெல்லாம் விளங்கி நிற்றலின்,'கேட்கநூலுளவோ?' என்றார். 'புலவராய்'எனவே, புலமை நிரம்புதற்கு இவை ஆயிரத்து முந்நூற்று முப்பதுகுறள்களும் போதுமென்பது பெறப்பட்டது. ஓதியோர்க்கு வரும் இம்மைப்பயன் சொல்லியபடி. (கசு)

## கஎ—முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்.

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால—வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வார்
எப்பா வலரினு மில்.

பத: —வள்ளுவனார் முப்பாலின் மிக்க - திருவள்ளுவரது திருக்குறளின்மேற்பட்ட, மொழி - நூலொன்று, உண்டு என பகர்வார் - உளதென்று சொல்லவல்லவர், எப்பாவலரினும் - எவ்வகைப்பட்ட புலவருள்ளும், இல் - இல்லை; (ஆதலால்), செயற்பால - (நாம் இந்நூலைக்குறித்துச்) செய்யக்கடவன, உள்ளுதல்- (இதன்பொருளைச்) சிந்தித்துக்கொள்ளுதலும், உள்ளி உரைத்தல்-சிந்தித்து (ப் பிறர்க்கு அதனை)ச் சொல்லுதலும், உரைத்த அதனை தெள்ளுதல் அன்றே-(பிறராலே)சொல்லப்பட்ட அதனைத் தெளிதலும் அன்றோ; (எ - று.)

விசேட:—மொழி—ஆகுபெயர். ஒப்பது வடமொழிவேத மிருத்தலின்'மிக்க மொழி'என்றும்,தமிழின்மாத்திரமன்றி வடமொழி முதலியவற்றினுள்ளபுலவரையுந் தழுவுதற்கு'எப்பாவலரினும்'என்றும், அறிவொப்புக் காண்டற்கு உரைத்ததனைத் தெள்ளுதல் என்றும் கூறினர். உள்ளுதலெனவே கேட்டலும், தெளிதலெனவே அவ்வாறொழுகலும் அடங்கின. இது பயிற்சி செய்தொழுகுமாறு சொல்லியபடி. (கஎ)

## கஅ.—ஆசிரியர் நல்லந்துவனார்.

சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாம்—தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பார்
எப்பா வலரினு மில்.

பத:—சாற்றிய பல்கலைஉம்-(அறிவுடையோரால்) சொல்லப்பட்ட பலநூல்களாலும், தப்பா அரு மறைஉம்-தப்பாத அரிய வேதத்தினும் போற்றி - காப்பாற்றிவைத்திருந்து, உரைத்த - (உலகத்தார்க்குச்) சொல்லப்பட்ட, பொருள் எல்லாம் - விடயங்களெல்லாம்,

தோற்ற (தன்னிடத்தே) காட்டும்படி, முப்பால் மொழிந்த - திருக்குறளைச்சொல்லிய, முதற்பாவலர்ஒப்பார்-திருவள்ளுவரை யொப்பவர், எப்பாவலரினும்-எவ்வகைப்பட்ட பாவலருள்ளும், இல் - இல்லை.

விசேட:— தம்மாலே சொல்லப்பட்டவற்றில் வழுவுருமையால் தப்பாஎன்றும், பொருளுணர்தற்கேயன்றி ஓதுதற்கும் எளிதன்றாதலின் அரு என்றும் விசேடணஞ் செய்யப்பட்டது. எப்பாவலரினுமில் - இதற்கு முன்னுரைக்கப்பட்டபடியே கொள்க. முதற்பாவலர் - முதன்மையையுடைய பாவலர்; நால்வகைப் பாக்களில் வெண்பாக்களும் அவற்றுள்ளும் குறள்வெண்பாவும் தலைமைபெற்று நிற்றலின், அக் குறள்வெண்பாவால் நூல்செய்த வல்லமையுடையரென்றுமாம். புலமையிலே நாயனாருக்கு ஒப்பின்மை சொல்லியபடி. (கஅ)

## கக.—கீரந்தையார்.

தப்பா முதற்பாவாற் றமாண்ட பாடலினன்
முப்பாலி னற்பான் மொழிந்தவர்—எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.

பத:—எப்பாலும் வை வைத்த கூர் வேல் வழுதி - எவ்விடத்திலும் கூர்மைவைத்த சிறப்புப்பொருந்திய வேலையுடைய பாண்டியராசன், மனம் மகிழ - மனங்களிக்க, தப்பா - (சொல்லப்பட்டபொருள்) வழுவாமல், முதற்பாவால் முதன்மையுடைய பாவாகிய குறளவெண்பாக்களாலே, தாம் மாண்ட பாடலினன்-தாம் மாட்சிபெற்ற பாடற்றொழிலினாலே, முப்பாலின்-மூன்று பால்களிலே, நாற்பால் - (அறம் முதலிய) நான்கு பகுதிப்பொருள்களையும், மொழிந்தவர் - திருவாய் மலர்ந்தவர், தெய்வத்திருவள்ளுவர் - தெய்வத்தன்மை பொருந்திய திருவள்ளுவநாயனார்; (எ - று.)

விசேட:—கூர்-சிறப்பு. நான்கனுள் மூன்றடங்குவதன்றி மூன்றனுள் நான்கடங்காமையின், வியந்து கூறப்பட்டதாயிற்று. நூல்செய்த சிறப்பும் நூலை அரங்கேற்றி அதனால் அரசனை மகிழ்வித்தமையும் சொல்லியபடி. (கக)

## உ0—சிறுமேதாவியார்.

வீடொன்று பாயிர நான்கு விளங்கறம்
நாடிய முப்பத்து மூன்றொன்றூழ்—கூடுபொருள்
எள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை.

பத — வள்ளுவர் சொன்ன வகை - திருவள்ளுவராலே சொல்லப்பட்ட திருக்குறளின் அதிகாரவகை,—வீடுஒன்று - (நூற்கெல்லாம் பொதுவாய்) விட்டுப் பொருந்திய, பாயிரம் நான்கு-பாயிரம் நான்கதிகாரத்தையுடையது: அறம் முப்பத்து மூன்று - அறம் முப்பத்து மூன்றதிகாரத்தை யுடையது: ஊழ் ஒன்று - ஊழ் ஓரதிகாரத்தையுடையது: எள் இல் பொருள் எழுபது - இகழ்தற்கு உரியதல்லாத

பொருள் எழுபத்திகாரத்தை யுடையது: இன்பம் இருபத்திற்றைந்து-காமம் இருபத்தைந் ததிகாரத்தை யுடையது; (எ - று.)

விசே:—அறத்துப்பாலுளடங்காது அதனை விட்டு நூற்கெல்லாம் பொதுவாய் நிற்றலின் வீடொன்றுபாயிரம்என்றும்,இம்மை மறுமை விடு மூன்றும் பயத்தற் சிறப்பிற்றாய் மூன்றனுண் முதனிற்றலின் விளங்கறம் என்றும், யாவர்க்கும்பொதுப்பட நாடித் தொகுக்கப்பட்ட அறத்தின் கூறுபாடு இவையேயாகலின் நாடிய முப்பத்துமூன்றுஎன்றும்,ஊழ்என்பது அறத்திலேனும் பொருளிலேனும்சேர்தற்கு இயைபின்றித் தனித்து நிற்றலால் ஊழொன்று என்றும், முன்னின்ற அறமும் பின்னின்ற இன்பமும் கைகூடுதற்குத் துணையாய் நிற்றலின் கூடுபொருள்என்றும், அப்பொருளின் பாகுபாடுகளெல்லாம் இவற்றினடங்குதலின் எள்ளிலெழுபதுஎன்றும் கூறினர். எள்ளல்-இகழ்தல். சில பழைய நூல்களிலே சிலவற்றைச் சாதியாரும் சமயத்தாரும் மிகுத்தும் குறைத்தும் வேறுபடுத்தலால் அப்படிப்பட்ட வேறுபாடு இதற்கும் வரினும் வருமென்று ஆசங்கித்து இதனதிகாரங்களுக்கு இங்ஙனந் தொகைசெய்தார். பின் இவ்வாறு தொகை செய்யப்பட்டு வருவனவற்றிற்கும் இதுவே கருத்தாகக் கொள்க. முப்பால்களுக்கும் அதிகாரத்தொகை சொல்லியபடி. (உ0)

## உக.—நல்கூர்வேள்வியார்.

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப—இப்பக்கம்
மாதானு பங்கி மறுவில் பு ச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு.

பத:—உப்பக்கம் நோக்கி - வடதிசை குறித்துச்சென்று, உபகேசி தோள் மணந்தான் - நப்பின்னைப் பிராட்டியினது தோளை மணந்த கண்ணபிரானை, உத்தரம் மா மதுரைக்கு-வடமதுரைக்கு, அச்சு என்ப - ஆதாரமென்று சொல்லுவர்: இப்பக்கம் - இப்பக்கத்தைக் குறித்து, மாதானுபங்கி - மாதானுபங்கியெனப்படுகின்ற, மறுஇல் புலம்-குற்றமற்ற புலமையாகிய (தேனைச்சொரிகின்ற), செந்நாப் போதார் - செவ்விய நாவாகிய மலரையுடையவர், புனல் கூடற்கு-நீர் வளத்தையுடைய தென்மதுரைக்கு, அச்சு-ஆதாரமாவர்; (எ-று.)

விசேட:—உபகேசி யென்பதற்கு ஈண்டு இயைபுநோக்கிநப்பின்னைப் பிராட்டியென்று பொருளுரைக்கப்பட்டது.உபகேசி—கூந்தலழகுடையாள்.நேமிநாத வுரையாசிரியர்"மாலே திணையே"என்னுஞ் செய்யுளில் "உபகேசியாவாள்—நப்பின்னைப் பிராட்டியார்" என்றனர். இப்பிராட்டியார் கண்ணன் மனைவியர்களுள் ஒருவர். கேசியென்றது திருமாலைக்குறிக்கு மெனக் கொண்டு, உபகேசியென்பது அவர் தங்கையாகிய பார்வதியைக்காட்டும் (உபேந்திரன் என்பதுபோல) என்பர் சிலர்; கேசி என்றபெயர் திருமாலுக்குப்பெயராகாது: கேசி யென்ற அசுரனை அவர் கொன்றாரேயன்றி அப்பெயரே இவருக்கு ஆயிற்றென்பது பொருத்தமுடைத்தாகாது: எனவே, உபகேசியென்பது நப்பின்னையைக்காட்டுவதுதான் பொருத்தமுடைத்து. மாதா அனு

புங்கி-மாதாவை நிகராகக் கொண்டு நடக்கின்ற ஒழுங்கினனெனப்படு தலின், அவள் பிள்ளைமே லருள் செய்தல்போல் இவர் உலகத்தார் மேல் அருள்செய்தல் சொல்லப்பட்டதாயிற்று. மாதானுபங்கி என்று தொடர்க்கு - செருக்கை எப்போதும் ஒழிந்தவன் என்றும் கூறுவர். நாப்போ தென்றதற்கேற்பப் புலமையிலே தேன் ஆரோ பிக்கப்பட்டது. அச்சுபோல் தாங்குதலால் அச்சுஎன்றார். நாயனு ராலே திங்கட் குடையுடைச் சீர்சால் வழுதியும் சங்கப்புலவருந் தழை த்தினி தோங்கிய மதுரைக்குஉண்டான சிறப்புச்சொல்லியபடி. (உக)

## உஉ.—தொடித்தலை விழுத்தண்டினர்.

அறநான் கறிபொரு ளேழொன்று காமந்
திறமுன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள்.

பத.—அறம் (திறம்) நான்கு - (பாயிரம் இல்லறம் துறவறம் ஊழ் என) அறப்பாலினுட்பிரிவுகள் நான்கும், அறி பொருள் (திறம்) ஏழ் - (அரசு அமைச்சு அரண் கூழ் படை நட்பு ஒழிபு என) அறியப் பட்ட பொருட்பாலினுட்பிரிவுகள் ஏழும், ஒன்று - பொருந்திய, காமம் திறம் மூன்று என பகுதி செய்து-காமத்துப்பாலினுட்பிரிவு கள் மூன்றுமாகப் பகுதிசெய்து, பெறல் அரிய நாலும் பெறுதற்கரிய (அறம்பொரு ளின்பம்வீடு எனப்படுகிற) நான்கு பொருள்களையும், மொழிந்த - சொல்லிய, பெருநாவலரே—, ஒழிந்த பொருள் - அவற் றுள் அடங்காது) ஒழிந்தபொருள் (உளதாயின் அதனை), நன்கு உணர்வார்போலும் - நன்றாக அறியவல்லவர்போலும்; (எ - று.)

விசேட: - திறமென்றது-அறமுதலியவற்றோடுங் கூட்டப்பட்டது. அறத்திறம் நான்கு,பொருள் திறம் ஏழ் என்று இந்த இரண்டுக்கும் திறம் வழங்கப்பெறுவதுபோல காமத்திறம் மூன்று தனியேவழங்கப் பெறுதலில்லை; எனினும், ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று, அவ்விருபாற்கூற்று என முத்திறங்காண்பது தகுதியுடைத்தே: மேல் மோசிகீரனார்பாடிய 27-ஆம் பாடலையும், அவர்வயின்விதும் பல் என்ற தலைப்புக்குப் பரிமேலழகர் உரைவகுத்திருத்தலையும் நோக்குக. ஆகவே ஒருசாரார் ஒழிபியலைக் குடியியல் என வழங் கியதுபோல், இந்தக் காமத்துப்பாலில் முதல் ஏழுஅதிகாரங்களை ஆண்பாற்கூற்றியல் எனவும், அதற்குமேல் 12 அதிகாரங்களைப் பெண் பாற்கூற்றியலெனவும்,அதற்குமேல் ஆறு அதிகாரங்களை இருபாற்கூற்றிய லெனவும் வழங்கினர் என்பது பெறப்படும். நாவலரே என்றமை யால், பிறரால் அறியப்படுவதன் றென்றதாயிற்று. முப்பாலியற் றொகையும்இவற்றினடங்காததுஒன்றில்லையென்பதும் சொல்லியபடி.

## உங.—வெள்ளி விதியார்.

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
அதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
இதற்குரிய ரல்லாதா ரில்.

பத.—செய்யா மொழிக்கும் - (ஒருவரால்) செய்யப்படாத மொழியாகிய வேதத்துக்கும், திருவள்ளுவர் மொழிந்த - திருவள்ளுவரால் அருளிச்செய்யப்பட்ட, பொய்யா மொழிக்கும்- (தன்வழியி னொழுகுவோர்க்குப் பயன்விளைவிலே) பொய்படாத மொழியாகிய திருக்குறளுக்கும், பொருள் ஒன்றே : ஆராயின் - ஆராயுமிடத்து, செய்யாஅதற்கு உரியர் - செய்யப்படாத அவ்வேதமோதுதற்குஉரியவர், அந்தணரே—: ஏனை இதற்கு உரியர் அல்லாதார்-பொய்படாத இத்திருக்குறளோதுதற்கு உரியவரல்லாதவர், இல் (உலகத்தில்) இல்லை;(எ-று.)

விசேட. - பூர்வவேதத்தை நித்தியமென்பார்மதம்பற்றிச் செய்யா மொழி என்றார். அது வடமொழியும் இது தென்மொழியுமாய் நின்று சில வேறுபாடுடைய போற் றேன்றினும் நுண்ணுணர்வானோக்குவார்க்குக் கருத்து வேறுபடாமையின், பொருளொன்றேஎனத் தேற்றேகாரங் கொடுத்துக் கூறினர். செய்பாமொழி, பொய்யாமொழி— அன்மொழித்தொகைகள். 'இதற்குரிய ரல்லாதாரில்' என்றதனாலும் பொதுவேதமாதலறிக. அதற்கும் இதற்கும் பொருள் வேறேஎன்றும் இதனையே ஈதற்குஅதிகாரிகளாவார்யாவரோவென்றும்நிகழ்கின்ற ஐய மொழித்தபடி. (உரு)

உச.—பாங்குடி மருதனார்.

ஓதற்கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

பத:—வள்ளுவர் வாய்மொழி - திருவள்ளுவரது வாயினின்றுந் தோன்றிய திருக்குறளினது,மாண்பு-மாட்சிமை சொல்லின்,(அது), ஓதற்கு எளிது ஆய்-ஓதப்படுதற்கெளிய சொற்களை யுடையதாகியும், உணர்தற்கு அரிது ஆகி - அறியப்படுதற்கரிய பொருள்களை யுடையதாகியும்,வேதம் பொருள் ஆய்-வேதமெனப்படுகின்ற பொருளாகியும், மிக விளங்கி-(அவ்வேதத்தின்)மிக்விளங்கி, தீது அற்றோர்-குற்றமற்றோர்கள், உள்ளுதொறு உள்ளுதொறு - நினைக்குந் தோறும் நினைக்குந்தோறும், உள்ளம் (அவர்களுடைய) மனத்தை, உருக்கும்-கரைக்கும்; (எ - று.)

விசேட:—ஓதற்கெளிதாய் எனவே நவின்றோர்க்கினிமை நன்மொழி புணர்த்தல்களும், உணர்தற்கரிதாகி எனவே ஆழமுடைமையும், வேதப்பொருளாய்எனவே விழுமியது பயத்தலும் பிறவுமாகிய அழகுகளி னமைதி சொல்லப்பட்டதாயிற்று. தீதற்றோர்-பொருளாராய்ச்சிக்கேற்ற நுண்ணறிவுடையோர். உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்கும் எனவே, முன் காணப்பட்டதினும் பின் காணப்படும் பொருள் சிறந்தும் விரிந்துந் தோன்றுதலுடைமை பெறப்பட்டது. இதனது அற்புதமான குணமுடைமைச் சிறப்புச் சொல்லியபடி. (உச)

உரு.—*எறிச்சலூர்மலாடனார்,

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—ஆய

*கோனாட்டுஎறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார் என்றொரு புலவர் புறநானூற்றிற் காணப்படுதலால், இப்புலவர்பெயர் 'எறிச்சலூர் மாடலனார்' என்றிருத்தலே தக்கது எனத்தோற்றுகிறது.

*அறத்துப்பா நால்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

பத:—வள்ளுவனார்—, ஆய்ந்து-(அவ்வேதத்தின கருத்துக்களை) ஆராய்ந்து, நூலின் திறத்து - (தம்மாலே செய்யப்பட்ட) நூலினது திறத்திற்குத்தக்க, பால் - நன்மையுடைமையால், தேர்ந்து- (இவையே உரியவை யென்று) தெரிந்து, பாயிரம் நான்கு - பாயிரம் நான்கதிகாரமும், இல்லறம் இருபான் - இல்லறவியல் இருபததிகாரமும், துறவறம் பன்மூன்று - துறவறவியல் பதின்மூன்றதிகாரமும்; ஊழ் ஒன்று ஆக-ஊழ் ஓரதிகாரமும்ஆக, ஆய-கூடிய, நால்வகை ஆ-(பாயிரம்முதலிய) நால்வகையுடைத்தாக, அறத்துப்பால்-அறத்துப்பாலை, உரைத்தார் - கூறினார்; (எ - று.)

விசேட:—முப்பாற் பொருள்களினும் முத்திக்குக் காரணமாதற் சிறப்புடைமையின் 'தாயதுறவறம்' என்றார். துப்பு-நன்மை: அது எல்லா வருணாச்சிரமங்களுக்கும் பொதுவாயிருக்கை. அறப்பாலிய லதிகாரத்தொகை சொல்லியபடி. (உ௫)

உசு.—போக்கியார்.

*அரசிய லைவைந் தமைச்சிய லீரைந்து
உருவல் லரணிரண்டொன் றொண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்று
எண்பொரு ளேழா மிவை.

பத:—அரசு இயல்—, ஐ ஐந்து-இருபத்தைந்து: அமைச்சு இயல்—, ஈரைந்து-பத்து: அரண் இரண்டு—: கூழ் ஒன்று—: திண்படை இரு இயல்—: நட்புப்பதினேழ்—: குடிபதின்மூன்று—: எண் பொருள் - எண்ணப்பட்ட பொருட்பாலுக்கு, இவை ஏழாம் - இவ்வியல்களேழாம்; (எ - று.)

விசேட:—இத்தொகைகளோடு அதிகாரமுடையதென்பது கூட்டுக. அரணுக்கு உருத்திட்பம் சிறத்தலின் உருவல்லரண் என்றும், பொருளுடையார்க்கே ஒளி அமைவதாதலின் ஒண் கூழ்என்றும், படைக்குக் கடும்போரிற் பின் கொடாததிண்மையுரித்தாதலின் திண்படை என்றும் கூறினார். பிற்காலத்தார் அமைச்சு முதலிய வைந்தனையும் அங்கவியலென ஓரியலாக்கியும் வழங்குப: பொருட்பாலில் அதிகாரத்தொகை சொல்லியபடி.

இந்தப்பாட்டு, நுண்பொருண்மாலையில், "அரசியலைவைந் தமைச்சியலீரைந்து, உரை நாடரண் பொருளொவ்வொன்று - உரைசால், படையிரண்டுநட்புப்பதினேழ் பன்மூன்று, குடியெழுபான் றொக்க பொருட் கூறு" எனக் காணப்படுகின்றது.

---

*பி - ம்: அறத்துப்பான் முப்பானெட்டா மென்றுரைத்தார்.

உஎ.—மோசிகீரனார்.

*ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராருக மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு.

பத:—ஆண்பால் ஏழ்—: பெண்பால் ஆறிரண்டு—: அடுத்து அன்பு பூண் பால் - (ஒருவரையொருவர்) அடுத்து அன்பைபூணுதற் பகுதியுடைய, இருபால் - அவ்விருபால், ஓர் ஆறுஆக—, மாண்பு காமத்தின் பக்கம்-மாட்சியான காமத்துப்பாலி னியல்கள், ஒருமூன்று ஆக—, நாமத்தின்-பெயர் பெற்ற, வள்ளுவனார், நன்கு கட்டுரைத்தார்-நன்கு கூறினார்; (எ-று.)

விசேட:—காமத்துப்பாலில் முதல் ஏழ் அதிகாரங்கள் ஆண்பாலைப் பற்றிவந்தனஎன்றும், பின்னர்ப் பன்னிரண்டு அதிகாரங்கள் பெண்பாலைப்பற்றிவந்தனஎன்றும், அந்தப்பத்தொன்பது அதிகாரங்கட்கும் பின்னருள்ள ஆறு அதிகாரங்கள் அவ்விருபாலையும்பற்றி வந்தனஎன்றும் காண்க. காமத்துப்பாலிலுள்ள மூவியல்களாம் இவையே பொருளிலக்கணத்துக்கமையக் களவியல் கற்பியலென இரண்டாக்கப்பட்டன. இத்தொகைகளுக்கும் முன்கூறப்பட்டதுகொள்க. காமத்துப்பாலிலதிகாரத் தொகை சொல்லியபடி. (உஎ)

உஅ.—காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
அந்தா மரைமே லயன்.

பத:—அதிகாரம்— நூறும் ஐயாறு மூன்றும்ஆ—நூற்று முப்பத்து மூன்றாக மெய்யாய் வேதப்பொருள்—, பொய்யாது விளங்க - பொய்யுறாதுவிளங்கும்படி அம் தாமரைமேல் அயன் - அழகிய தாமரைமலர்மேல் வீற்றிருக்கின்ற நான்முகக்கடவுள். தான் வள்ளுவன் ஆகி—, உலகிற்கு தந்தான் உலகத்தார்க்கு(த் தமிழிற் செய்து) தந்தான்; (எ - று.)

விசேட:—உலகு - இங்கே மக்களை யுணர்த்திநின்றது. மெய்யாய வேதப்பொருள் பொய்யாது விளங்கவெனவே, இதற்கு முன் மெய்யாய பொருள் பொய்யாய் மறைந்தும், பொய்யாய்பொருள் மெய்யாய் விளங்கியும் கிடந்தமை சொல்லப்பட்டதாயிற்று. அதிகாரத்தொகையோடு நூற்பொருளியல்பு சொல்லியபடி.

---

*இப்பாட்டை யடுத்துப் பின்வரும்பாடல் நுண்பொருள்மாலையில் எழுதப் பட்டுள்ளது: ஒருமாறு:—புணர்தல்பிரிதற் பொருள் களவுகற்பென், றுணருமிருகூறுமுரைக்கிற் புணருங், களவேழறு மூன்றுகற்பிவையை வைந்தா, அளவுறுகாமத்துப்பாலாம். இச்செய்யுளில் களவு கற்பு என்று இருபகுதியுண்டு என்றும், அவை காமத்துப்பாலில் களவியல் ஏழதிகாரமும் கற்பியல் பதினெட்டதிகாரமும் ஆம்என்றும் கூறப்பட்டுள்ளன.

## உகூ.—மதுரைத் தமிழ் நாகனார்.

எல்லாப் பொருளுமிதன் பாலுளவிதன்பால்
இல்லாத வெப்பொருளு மில்லையால்— சொல்லால்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

பத:—எல்லாப்பொருளும் - (பல்வகை நூல்களாலுஞ் சொல்லப்பட்ட) எல்லாப்பொருளும், இதன்பால் உள - இந்நூலகத்தடங்கியிருக்கின்றன: இதன்பால் இல்லாத எப்பொருளும் - இதனிடத்தில் இல்லாத யாதொரு பொருளும், இல்லை-(எந்நூலகத்தும்) இல்லை: (ஆதலால்), சொல்லால்பரந்த பாவரல் - சொல்லளவினாலே விரிந்தநூல்களால், பயன் என்-பயன் யாது? வள்ளுவனார் சுரந்த பா - திருவள்ளுவராலே தரப்பட்ட இந்நூலொன்றே, வையத்துணை - மண்ணுலகத்தாருக்குத் துணையாதலமையும்; (எ -று.)

விசேட:—எல்லாப்பொருள்களுமாவன - முதல் வழி சார்பென மூவகைப்பட்ட அறநூல் பொருணூல் இன்பநூல் வீட்டுநூல் என்பவற்றிற் செம்பொருள் ஆக்கப்பொருள் குறிப்புப்பொருளென இம்மூவகையாற் கொள்ளக்கிடந்த காட்சிப்பொருள்களும் கருத்துப்பொருள்களுமாம்.தொழிலும்பண்பும் ஒரோவழிப்பொருளெனற் கேற்புடைமையின் அவையும் இவற்றுள் அடங்குமாறறிக. பின்னும் அதனை வலியுறுத்தற்கு, இதன்பாலில்லாத வெப்பொருளு மில்லை என்றார். சொல்லாற் பரந்தனவே, அவைபொருளாற் பரப்பின்மை பெறப்பட்டது: பரத்தல்-பதினாயிரம் நூறாயிரம் முதலிய கிரந்தவகையால் விரிதல். சொல்லாற்பரந்த நூல்களை ஆய்வோர் மலையகழ்ந்து எலிபிடித்தல்போல் மிகவருந்திச் சிறுபயன் கொள்ளுதலால், 'என்பயன்?' என்றார். ஆல் - அசை. பா, வையம்-ஆகுபெயர்கள். சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையோர்க்கு விதிவிலக்குகள்முற்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கண்டுதெளியுமாறு உணர்த்தித் தடுமாற்றந் தீர்த்தலின், வையத்துணை என்றார். முற்றுருங் துணராவிழைவார்க்கு இஃது இன்றியமையாச் சிறப்பிற்றென்றபடி. (உகூ)

## கூ0.—பாரதம்பாடியபெருந்தேவனார்.

*எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

பத:—*பாரதம்(பண்டை)சீராமகதை-பாரதம் பழைய சீராமகதையையும், மனு பண்டைமறை - மனுஸ்மிருதி பழைய வேதத்தையும், நேர்வன-ஒப்பனவாகும்: எப்பொருளும்-எவ்வகைப்பட்ட பொருள்களையும், யாரும்-எவ்வகையோரும், இயல்பின்-(அவற்றின்)தன்மையோடு,

* பாரதமும் சீராமகதையும் மனுதருமசாஸ்திரமும் பழையவேதமும் முப்பாலுக்கு ஒப்பாவனவாம்; வேறு நூல் ஒப்பாதலில்லை என்று இவ்வெண்பாவுக்குப் பொருள் கூறலுமாம்.

அறிவுற-அறிய, செப்பிய-(அவர்க்குச்) சொல்லும்படிக்கு, வள்ளுவர் - திருவள்ளுவர், செப்ப வரும்-சொல்லலால்வந்த, முப்பாற்கு - திருக்குறளுக்கு, நிகர் - உவமானமாகத்தக்கது, இல்லை-ஒன்றில்லை; (எ - று.)

விசேட:—மற்று - அசை. அறிதற்கரிய வேதாந்தப்பொருளு மென்றற்கு எப்பொருளும் என்றும், உயர்குலத்தாரேயன்றி ஏனையோரு மென்றற்கு யாரும் என்றும், ஐயந்திரிபின்றியறிய என்றற்கு இயல்பினறிவுற என்றும், இதுவே சுருதி குரு இரண்டுமாமென்றற்கு செப்பிய என்றும் கூறினர். பண்டை என்பது சீராமகதைக்குங் கூட்டுக: கதாரூபமாயிருந்து பாரதராமாயணமெனவும், விதிரூபமாயிருந்து சுருதிஸ்மிருதி யெனவும் கூட்டிச்சொல்லப்படுதலால், உவமான உபமேயங்களாத லறிக. எப்பொருளும் யாருமியல்பி னறிவுறச் செப்புதல் வேதத்திற்கின்மையால், முன் முப்பாலின் மிக்கமொழி என்றஅதனாற் பெறப்பட்ட வேதத்தினுெப்புமையை மறுத்தபடி. (௯0)

## ௯௧.—உருத்திரசன்மகண்ணர்.

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்து
உணச்சுரக்குந் தாய்முலை யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்கு
ஆய்தொறு மூறு மறிவு.

பத:—மணல் கிளைக்க-மணலைத் தோண்டுந்தோறும், நீர் ஊறும்-நீர்பெருகும்: மைந்தர்கள் வாய் வைத்து உண - புதல்வர்கள் வாய் வைத்து உண்ணுந்தோறும், தாய் முலை - தாயினது முலைக்கண், ஒள் பால் சுரக்கும் - நல்லபால்பெருகும்: (அவைபோல), பிணக்கு இலா வாய் மொழி - பிணங்குதற்கு ஏதுவில்லாத வாய்மைச்சொல்லை யுடைய, வள்ளுவர் முப்பால் - திருவள்ளுவரது திருக்குறளை, ஆய் தொறும் - ஆராயுந்தோறும், மதி புலவோர்க்கு - அறிவுடைய புலவர்க்கு, அறிவு ஊறும் - அறிவு வளரும்; (எ - று.)

விசேட:—கற்பிதமாகிய சாதிசமயங்களின் மானம்பற்றி, உள்ளதை இல்லதாக்கவும், இல்லதை உள்ளதாகவும், சிறியதைப் பெரியதாகவும், பெரியதைச் சிறியதாகவும், தீயதை நல்லதாகவும், நல்லதைத் தியதாகவும் புனைந்து பிறர் பிணங்கும்படி சொல்லப்பட்டதல்லாமையால், பிணக்கிலாவாய்மொழிஎன்றார். மதிப்புலவோர்க் கறிவூறும் எனவே, அவர் அவ்வறிவைக்கொண்டு பிறர்க்கெல்லாம் விதிவிலக்குகளைக் கற்பித்தல்வேண்டு மென்றதாயிற்று. இதனைச் சிலகாற்பயிறலின் அமையாது பலகாலும் பயிற்சி செயல்வேண்டு மென்றபடி. (௯௧)

## ௯௨.—பெருஞ்சித்திரனர்.

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினல்
ஓதிய வொண்பொரு ளெல்லா,முரைத்ததனல்
தாதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன.

பத:—தாது அவிழ் தார் மாற - பொடியொடு விரிந்த பூமாலையை யுடைய பாண்டியராசனே! ஏதம் இல் வள்ளுவர் - குற்றமில்லாத

திருவள்ளுவர், இன் குறள் வெண்பாவினுல் - இனிய குறள் வெண் பாக்களாலே, ஓதிய - (நான்கு வேதங்களாலுஞ்) சொல்லப்பட்ட, ஒள் பொருள் எல்லாம் - ஒள்ளிய பொருள்களையெல்லாம், உரைத்ததனுல்- சொல்லினமையால், மேதக்கன - மேம்பாட்டுக்குத்தக்கவை, தாமே - அக்குறள் வெண்பாக்களோ? தமை பயந்த வேதமே - (முதனூலாய் நின்று) அவற்றைப் பயந்த வேதங்களோ? (நீ சொல்வாயாக).

விசேட:—தாம் தம்மை எனப்பட்டவை, அவை அவற்றை என் னும் பொருளைத் தந்து நின்றன. ஏகாரம் இரண்டும், வினு. பிற நூலாசிரியர்க்கெல்லாம் அவரெதிரிகளாலே மறுக்கப்பட்டு வருங் குற்றம்போல்வது இவற்கு இல்லை யென்றற்கு 'ஏதமில் வள்ளுவர்' என்றும், தாங் குறியவாய் நின்று கற்போர்க்கு வருத்தம் விளையாமை பற்றி 'இன்குறள்' என்றும், உணர்வுடையோரால் விரும்பப்பட்ட நற்குணமுடைமைபற்றி 'ஒண்பொருள்' என்றும் கூறினர். நூலாசிரி யர்க்கும் நூலுக்கும், நூனுதலிய பொருளுக்கும், தகுதி தோன்றச் சொல்லப்பட்ட விசேடணகுணங்களாலே இவ்வேதம் அவ்வேதத்தி னுஞ் சிறப்புடையதென்று குறிப்பித்தபடி. (௩௨)

## ௩௩.—நரிவெரூஉத்தலையார்.

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூல்—மன்பதைகட்கு
உள்ள வரிதென் றவைவள் ளுவருலகம்
கொள்ள மொழிந்தார் குறள்.

பத:—இன்பம் பொருள் அறம் வீடு என்னும் இ நான்கும் - இன்பம் முதலிய இந்நாற்பொருளியல்புகளையும், மன்பதைகட்கு - மக்கட் பரப்புக்கு, முன்பு - அக்காலத்தில், அறியச்சொன்ன -அறியும் வண்ணஞ் சொல்லப்பட்ட,முது மொழி நூல் பழமொழிவேதமானது, உள்ள அரிது என்று-ஓதியுணர்வதற் கரிதென்று, வள்ளுவர்—, அவை - அவற்றை, உலகம் கொள்ள - உலகத்தார் எளிதினுணரும் படி, குறள் - திருக்குறளை, மொழிந்தார் - சொல்லினர்; (எ - று.)

விசேட:—முன்பறிய எனவே உற்சர்ப்பிணியாகலின் அக்காலத் தோர்க்கு உணர்தற்கேற்ற ஆயுணீட்சியும் உணர்வுவலியும் இருந்தன வென்பதூஉம், அவசர்ப்பிணியாகலின் இக்காலத்தோர்க்கு அவையில வென்பதூஉம் பெறப்பட்டன. இவ்விரண்டும் அவாவறுத்தல் முதற் பாட்டுரையிற் காண்க. தேய வழக்கிற்படாததும் வருந்திக்கற் போர்க்கு மாத்திரம் புலப்படுவதுமாய் எல்லா மொழிகட்கும் முற் பட்டுக் கடவுள்மொழியாய் நிற்றலின், முதுமொழி என்றார். அற முதலிய நான்கும் பிரிவுபட்டுத் தோன்றுமையை யுடைத்தாதலின் உள்ள அரிதாயிற்று. பழையவேதமுளதாகவும் வேறிதுசொல்லு தற்குக் காரண முணர்த்தியபடி. (௩௩)

## ௩௪.—மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார்.

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு

பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றும்
கறங்கிருண்மா லைக்கும் பெயர்.

**பத.**— பூமேல் - பூவுலகின்கண்ணே, புலவர் திருவள்ளுவர் அன்றி - புலவரெனத் திருவள்ளுவரையன்றி, சிலவர் புலவர் என செப்பல் - வேறு சிலரையும் புலவரென்று சொல்லுதல்,— மாலை - மாலையென்பது, நிலவு பிறங்கு ஒளி மாலைக்கும் பெயர் - நிலவால் விளங்குகின்ற ஒளியையுடைய இரவுக்கும் பெயராக, மற்றும்—, கறங்குஇருள் மாலைக்கும் பெயர் - சூழ்கின்ற இருளையுடைய இரவுக்கும் பெயராக, செப்பல் - சொல்லுதல்போலும், (எ-று.)

**விசேட:**—செப்பல் என்றது, பின்னுங் கூட்டப்பட்டது. புலமை யாவது - பலவேறு வகைப்பட்ட நூலுணர்ச்சிகளையெல்லாம் ஒருங்கே கொண்ட பேரறிவுடைமையாம். உயர்வொப்பற்ற இவரது புலமையைக் குறித்து நோக்குங்கால் ஏனையோர் புலமை புலமையன்றாய் முடிதலின் இவ்வாறு கூறினார். புலவரென்பது, நாயனாருக்கே, காரணப்பெயரா மென்றபடி. மாலை - இரவு: இச்சொல் நிலவொளிவீசும் இரவுக்கும் இருள்மண்டிய இரவுக்கும் பேராதல்பற்றிவந்த எடுத்துக்காட்டு.(௩௪)

## ௩௫.—மதுரையறுவைவாணிகன் இளவேட்டனார்.

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டும்
மன்பதைக் கெல்லா மனமகிழ—அன்பொழியாது
உள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

**பத:**—இன்பமும் துன்பமும் என்னும் இவை - (பின்வரக்கடவன வாய) சுகமும் துக்கமுமெனப்பட்ட இவற்றினுடைய, இரண்டும் - இரு வகைக் காரணங்களையும், உள்ளி உணர - ஆராய்ந்தறியவும்,— அன்பு ஒழியாது - (தம்மேல்) அன்பு நீங்காமல், மனம் மகிழ - உள்ளங் களி கூரவும்,— மன்பதைக்கு எல்லாம் - மக்கட்பரப்புக்கெல்லாம், ஓது சீர் வள்ளுவர் - புகழப்படுஞ் சீரையுடைய திருவள்ளுவர், வாயுறை வாழ்த்து - வாயுறை வாழ்த்தாக, உரைத்தார் - (திருக்குறளைச்) சொல் லினார்; (எ - று.)

**விசேட:**—இன்பத்தின் காரணம் விதிக்குறளாலும், துன்பத்தின் காரணம்விலக்குக்குறளாலும் சொல்லப்பட்டன. முன்பறிதற்குப் பயன் அவற்றைச் செய்தலும் தவிர்தலுமாம். வேண்டுவனவெல் லாந் தொகுத்துணர்த்தலின் மன மகிழ்தல் சொல்லப்பட்டது. அவ் வேதம்போலாது பலர்க்கும் உபயோகியாகச் சொல்லலின் மன்பதைக் கெல்லாம் என்றார். வாயுறை வாழ்த்தி னியல்பு "வாயுறை வாழ்த்தே வயங்க நாடின், வேம்புங்கடுவும் போல வெஞ்சொல், தாங்குத லின்றி வழிநனிபயக்குமென்று, ஓம்படைக் கிளவியின் வாயுறுத்தற்றே" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தாலறிக. எதிர்காலவிளைவுணர்ச்சி பயத்தல் சொல்லியபடி. (௩௫)

## ௩௬.—கவிசாகரப்பெருந்தேவனார்.

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனதம்
ஆவிற் கருமுனியா யானைக் கமரும்பல்

